# சக்தி

## மாத வெளியீடு

2.46



பொருள் அடக்கம்





அணா 8

பார்த்திபஹு தைமீ
மலர்: 12 இதழ்: 10

ஸ்ய் - 46


பார்த்திப
மலர் 12

# சக்தி

தை
இதழ் 10


அன்பும் அறிவும் அறமும் திருவும் அருளும் ஆற்றலும்
இன்ப வாழ்வும் விளங்கச் சக்தி எழுந்து பொலிகவே!

## காந்தி பார்த்தாச்சா?

மகாத்மா காந்தி ஜனவரி 21ந்தேதி மாலையில் சென்னைக்கு வந்து சேர்ந்தார். பிப்ரவரி 1ந் தேதி சென்னையை விட்டுப் புறப்பட்டார். இடைப்பட்ட பத்து நாளும் காந்திஜிக்கு ஓய்ச்ச லொழிவு கிடையாது. சதா அலுவல்கள் நிறைந்திருந்தன. இந்தத் தள்ளாத வயதிலும், இளமை நிரம்பிய ஒரு வாலிபனைப் போல, அவர் உற்சாகம் மிக்கவராய்ச் செயலாற்றியது, நம் மனைவரும் மனதில் கொள்ளத்தக்க முதல் படிப்பினையாகும்.



காந்திஜி வந்தார். சென்னைமாநகரமே ஆனந்த லாகிரி கொண்டு விட்டது. ஏன், மாகாணமே அப்படியாகிவிட்டது என்று சொல்லலாம். இந்தப் பத்து நாளும்தான், தியாகராஜநகரில் என்ன ஜன சமுத்திரம்! என்ன கண் கொள்ளாக் காட்சி! ஒவ்வொரு நாள் பிரார்த்தனைக் கூட்டமும், என்ன வசிய சக்தி பெற்றது! நகர மக்கள் மட்டுமா? மாகாணத்தின் பல்வேறு பகுதிகளி லிருந்துமே, எண்ணற்ற அன்பர்கள், அந்த மகானின் தரிசனத்துக்காகச் சென்னை வந்து கூடி விட்டார்கள். ஹிந்தி நகரில், 'ஜே ஜே!' என்று எந்நேரமும் திருவிழாக் கூட்டந்தான். பிரதம ஜட்ஜி தம்பதிகள் உள்பட, ஹைகோர்ட் ஜட்ஜிகள் சிலரும் காந்திஜியைத் தரிசித்தார்கள். பல பெரியோர்கள் தரிசித்தார்கள். கவர்னர் தம்பதிகளும்கூடக் காந்தி சந்திப்பை விரும்பி யடைந்தார்கள்.

இந்த நாட்களிலே, நகரிலே எங்கே பார்த்தாலும், ஒரே கேள்விதான் எழுந்தது: 'காந்தி பார்த்தாச்சா?' கொஞ்சம் வெள்ளைச் சட்டை போட்டுக் கொண்டு, யாராவது வீதியிலே, சாலையிலே நடந்தால், 'என்ன, காந்தி பார்க்கவோ?' என்ற கேள்வி எதிர்ப்படும். கொஞ்சம் தூசி படிந்த உடுப்போடு, சிறிது தள்ளாடி நடை போட்டால், 'ஓஹோ! காந்தி பார்த்துவிட்டு வருகிறாப் போல் இருக்கு' என்ற ஊகம் ஒலிக்கும். ஏனென்றால், பஸ்களிலெல்லாம் இடம் கிடையாது. நடக்கத் துணிந்தவனுக்குத்தான் காந்தி தரிசனம் எளிதாய்க் கிட்டும். மற்றவன் விஷயம் சந்தேகந்தான்.

'காந்தி பார்த்தாச்சா' என்று கேட்பதிலேயே ஒரு களிப்பு. 'நான் பார்த்தாச்சு' என்று அதிலே ஒரு தொனி யிருக்கும். அதுவும் எப்படி? 'கிட்ட இருந்து பார்த்தீர்களா? தூர இருந்து பார்த்தீர்களா?' கிட்ட இருந்து பார்த்திருந்தால், அந்தக் கௌரவமே வேறேதான். அந்தப் பாக்கியம் எல்லாருக்கும் கிடைப்பது எப்படி இயலும்? சிலருக்கே கிடைத்தது.

உண்மையிலே, அது அளவிறந்த பாக்கியமாகும். பிரிட்டிஷ் தூதுக் கோஷ்டியினரில் ஒருவரான ஸோரென்ஸன், காந்திஜியைப் பார்த்துவிட்டுச் சொன்னார்:

"காந்திஜீ இந்திய மக்களிடையே தான் பிறந்தார்; என்றாலும், அவர் மனித சமூகம் முழுவதற்குமே சொந்தமானவர். அவர் செய்துள்ள சேவைகள் அளவிடற்கரியவை. நாம் வேறு எத்தனையோ பெரியோர்களை அறிவோம்; பெரிய பெயர்களைக் கேட்டிருக்கிறோம். ஆனால், காந்திஜீயின் ஆழ்ந்த ஆத்மீக உன்னதம் வேறு யாரிடமும் இல்லை. இதை நான் அந்தரங்கசுத்தியோடு நம்புகிறேன்."

காந்தியின் மூர்த்திகரம் அவ்வளவு உயர்ந்தது; அவரைத் தரிசித்தவர்கள், பெரும் பாக்கியசாலிகள்.

காந்திஜீயை நாம் அனைவரும் பார்த்துவிட்டோம்; ஸினிமாக் கொட்டகைக்காரர்களெல்லாம் தவிக்கும்படி-அந்தக் கொட்டகைகளெல்லாம் காலியாயிருக்கும்படி விட்டுவிட்டுக் கூட-காந்திஜீ தரிசனம் செய்துவிட்டோம். இந்தத் தரிசனத்தின் பரிபூர்ண பலனை நாம் அடையவேண்டுமானால், காந்திஜீயின் பல மணிவாசகங்களையும் நம் மனதிலே நாம் முடிபோட்டுக் கொள்ளவேண்டும். காந்திஜீ சொன்னார்:

*(1)* அடுத்த வருஷம் நாம் இந்தச் சுதந்தரப் பிரதிஞ்ஞை செய்யத் தேவையிராதென்றும், அதற்கு முன்னேயே சுதந்தரம் அடைந்திருப்போமென்றும், நாம் நம்புவோமாக! (சுதந்தர தினப் பிரார்த்தனைக் கூட்டத்தில்)

*(2)* ஹரிஜனங்களில் எவரோ சிலர் பாரிஸ்டர்களாகவும் ஹைக்கோர்ட் ஜட்ஜிகளாகவும் பதவி பெற்றால் போதாது. ஹரிஜன சமூகம் முழுவதுமே உயர்வடைய அனைவரும் உழைக்கவேண்டும். (ஹரிஜன் மகாநாட்டில்)

*(3)* ஹிந்துஸ்தானியை இன்னும் ஏராளமான பேர் கற்கவேண்டும். அதைத் தேசத்தின் உண்மையான பொதுப் பாஷையாக, ஆக்கவேண்டும். (தட்சிண பாரத ஹிந்திப் பிரசார சபைப் பட்டமளிப்பு விழாவில்)

*(4)* புத்தகங்களின் மூலம் மட்டிலுமே கல்வி கற்பிப்பதில் எனக்கு விருப்பமில்லை. அனுஷ்டான ரீதியாகவும் கற்பிக்கவேண்டும். (நயா தாலிமி பட்டமளிப்பு விழாவில்)

*(5)* இந்தியப் பெண்கள் தங்களுடைய பரிபூர்ண தேஜஸை அடைவார்களானால், அந்நியன் இங்கே இருக்க மாட்டான். அவர்களுடைய உண்மையான ஆபரணம், உடையும் நகையும் அல்ல; சற்குணமே. (பெண்கள் மகாநாட்டில்)

*(6)* இங்கிலீஷில் பேசுவதும் நண்பர்களுக்குக் கடிதம் எழுதுவதும் வருந்தத் தக்கது; மானக்கேடாகும். அது நாம் எவ்வளவு கேவலமாகிவிட்டோம் என்பதன் அறிகுறியேயாகும். (மாணவர் அணிவகுப்பில்)

*(7)* ஆலை முதலாளி ஆலையின் சொந்தக்காரன் அல்ல; தொழிலாளரே அதன் சொந்தக்காரர்களாவர்... தொழிலாளர்கள் அதிகக் கட்டுப்பாடும் அதிகப் புத்திசாலித்தனமும் அடைந்தால், அவர்களே ஆலைகளையும் தொழிற்சாலைகளையும் கைப்பற்றி விடலாம் என்பது என் நம்பிக்கை. (தொழிலாளர் அணிவகுப்பில்)

*(8)* நீங்கள் அழகைச் சிருஷ்டிக்க வேண்டும். ஆனால், அது சத்தியம், அஹிம்சை இவைகளின் மார்க்கந்திலேயே இருக்கவேண்டும். (எழுத்தாளர், கலைஞர் மகாநாட்டில்)

மகாத்மாஜியின் இந்தப் பொன்மொழிகளின் கருத்தையெல்லாம் எத்தனைக்கெத்தனை நம் வாழ்க்கையில் கடைப்பிடிக்கிறோமோ - கடைப்பிடிக்க முடிகிறதோ - அத்தனைக் கத்தனைதான், நாம் அவரைப் போற்றித் தரிசித்த பலனை அடைவோம்.



**தமிழ் கிடையாதா:** ஹிந்தி நகரின் கண்காட்சிச் சாலையில், 'காட்சிப் பொருள்களைத் தொடவேண்டாம்' என்று இங்கிலீஷில் எழுதிய ஓர் அட்டை தொங்கிக் கொண்டிருந்தது. காந்திஜி, "இது என்ன திருஷ்டி பரிகாரமா?" என்று கேட்டார்.

அவர் கொஞ்சதூரம் போனதும், இங்கிலீஷிலேயே எழுதிய இன்னோர் அட்டை தொங்கியது. அதைக் கண்ட காந்திஜி, "இந்த இங்கிலீஷ் வார்த்தைகளுக்கெல்லாம், தமிழ் அகராதியிலே அர்த்தம் கிடையாதா?" என்றார்.

—ரா. கா., (ஹிந்துஸ்தான்

# காலச்சுழல்

**சோற்றுப் பஞ்சமா:** இந்தியாவிலே சில மாதங்களில் சோற்றுப் பஞ்சம் வரப்போகிறதாம். வங்காளம், சென்னை, தக்காணம் இவைகளிலுள்ள பத்துக் கோடி மக்கள் தவிக்க நேருமாம். இதைத் தீர்க்க என்ன வழி? ராபெர்ட் ஹட்சின்ஸ் என்ற ஐரோப்பியரை, சர்வதேச உணவுபோர்டு முன் வாதாட இந்திய சர்க்கார் அனுப்பினர்கள். "எங்களிடம் நேரே வராதே. பிரிட்டனிடம் போ. இவ்வளவு சோறு கேட்காதே. குறைத்துக் கேள்" என்று அவர்கள் சொன்னர்களாம். அவர் பிரிட்டனுக்குத் திரும்பி வந்திருக்கிருராம். இப்போது, உணவு மெம்பர் ஸ்ரீ வத்ஸவாவே பிரிட்டனுக்குப் பயணமாக எண்ணியிருக்கிருராம். வைசிராய் சென்னைக்கு வந்து, பஞ்சப் பிரச்னையை ஆராயப்போகிருராம். இதையெல்லாம் பார்க்கையில், பஞ்சம் வருமுன்பே நமக்குப் பாதி உயிர் போய்விடும்போல் இருக்கிறது.

**ருஷ்யா - பிரிட்டன் மல்யுத்தம்:** இரான் விஷயத்தில், இரானும் ருஷ்யாவும் நேருக்கு நேரே பேசி, ராஜி செய்து கொள்ளவேண்டும் என்று ருஷ்யா சொல்லியது. இதைச் சர்வதேசப் பாதுகாப்புக் கவுன்ஸிலும் ஒப்புக்கொண்டுவிட்டது. நல்லசெய்தி. ஆனல், இரான் விவகாரமும் சரி, கிரீஸ் விவகாரமும் சரி, கவுன்ஸிலில் வாதத்துக்கு வந்தபோது, பிரிட்டிஷ் பிரதிநிதி பெவினும், ருஷ்யப் பிரதிநிதி விஷின்ஸ்கியும் ஒருவருக் கொருவர் அடிதடியில் இறங்காமல் விட்டார்களே; அதுவே ஆச்சர்யம். விவாதத்தில்அவ்வளவு நெருப்புப் பறந்தது.

**வைசிராய் (அதிகப்) பிரசங்கம்:** இந்திய அஸெம்பிளியிலே வைசிராய் ஏழு நிமிஷம் பேசினர். சுருக்கமான பேச்சு. "இந்திய சுதந்தரம் முதல் வேலை என்று இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காரும் கருதுகிறோம். ராஜீயத் தலைவர்களைக் கொண்ட புதிய இந்திய நிர்வாக சபை அமைக்கவும், இந்திய அரசியல் நிர்ணய சபை அமைக்கவும், பிரிட்டிஷ் சர்க்கார் உறுதிகொண் டிருக்கிருர்கள்" என்ருர். நல்ல காரியம். ஆனல், நல்ல பிள்ளைகளாய் நடவுங்கள் என்று சட்டசபை மெம்பர்களுக்கு, வைசிராய் ஓர் உபதேசம் செய்தார். அதுதான் சற்று அதிகப்பிரசங்கம்.

**சீன ஒன்றுபட்டது:** சீனவிலே சியாங் சர்க்காருக்கும் பொது உடைமை சர்க்காருக்கும் சமாதானம் உண்டாகிவிட்டது. சந்தோஷச் செய்தி. இந்தச் சமரசத்தில் ருஷ்யாவின் பங்கு என்ன, அமெரிக்கா — பிரிட்டனின் பங்கு என்ன என்று தெரியவில்லை. ஆனல், சமீபத்தில் வந்த ஒரு சீமைப் பத்திரிகையிலிருந்து ஒரு விஷயம் புலனகிறது. சீனதான் யுத்தச் சேதத்திலிருந்து முதலிலே மீளக்கூடிய பெரிய மார்க்கட்டு என்று அமெரிக்கா நாக்கைத் தீட்டிக் கொண்டிருக்கிறது. பிரிட்டனும் தாங்களும் முட்டிக் கொள்ளாமலே அந்த மார்க்கட்டிலே வேலை செய்யலாம் என்றும் அது நினைக்கிறது. சீனச் சமரசம் இதற்கு ஏற்ற வசதியா? அல்லது, ருஷியாவின் மூக்கு அதிலே நுழைந்திருக்கிறதா? இதுதான் தெரியவில்லை.

**பர்மா ஆட்சேபிக்கிறதாம்:** பர்மாவுக்கும் மலேயாவுக்கும் பண்டித ஜவஹர் போய்வர வேண்டும் என்று காங்கிரஸ் தீர்மானித்தது. ஜவஹர் வருவதை மலேயாவிலுள்ள ராணுவ சர்க்கார் ஆட்சேபிக்கவில்லை; பர்மாவிலுள்ள ஸிவில் சர்க்கார் ஆட்சேபிக்கிறதாம்! சர்க்காராவது; கவர்னர் ரெஜினல்டு டார்மன் ஸ்மித் ஆட்சேபிக்கிருர் என்றே அர்த்தம். பர்மிய ஜனங்கள் ஆட்சேபிக்கமாட்டார்கள். பிரிட்டிஷ் கம்பெனி முதலாளிகளெல்லாம் தாராளமாய்ப் பர்மாவுக்குள் திரும்பி நுழையும்போது, ஜவஹருக்கு ஏன் ஆட்சேபம்?



# என் சிற்றன்னை

டுவான் யாங்

மூன்று வருஷத்துக்கு முந்தி என் தாயார் இறந்தாள். என் தகப்பனர் மறு மணம் செய்து கொண்டார். அவருக்கு வேலை அதிகம். அதனுல், சமைத்துக் கழுவி வீட்டு வேலை பார்க்க நேரமில்லை. ஆகவே, லாஸாவிலிருந்து வந்த திபெத் மாது ஒருத்தியை இரண்டாம் தாரமாக மணந்து கொண்டார். அவள் பெயர் ஷேஸிங் து ஆல்மா. இதனுல் தனக்குச் சௌகரியம் ஏற்படுமென்றும், அவள் என்னையும் தாய்போல் கவனித்து வருவளென்றும், என் தகப்பனர் நினைத்தார்.

நாலைந்து வாரம் என்னிடம் அவள் பட்சமா யிருந்தாள். என் தகப்பனர் ஒரு ரொட்டிக் கடையை ஆரம்பித்தார். அவர் இல்லாதபோது, பிஸ்கோத்துகளோ, பணியாரங்களோ, மிட்டாய், தித்திப்புகளோ, வாங்க வருகிறவர்களுக்காகக் காத்துக்கொண்டு, என் சிற்றன்னை கடையில் அமர்ந்திருப்பாள். நாள்பூராவும் மேல் ஜோடு, கம்பளிக் குளிர் அங்கி பின்னுவதில் சுறுசுறுப்பாய் ஈடுபட்டிருப்பாள். இவைகள் சொந்த உபயோகத்துக்கும் விற்பனைக்கும் ஆகும்.

**சிற்றன்னைமார் உலகெங்குமே, எக்காலத்திலுமே, ஒரே விதந்தான். திபேத்தில் சீனர் ஆட்சி நடக்கையில் அங்கே சீன சேனையில் சேவை புரிந்து, திபேத்தியர் கலகத்தில் கைதியான ஒரு சீனரின் மகன் டுவான் யாங். அவர் 'இந்தியாவில் குடும்ப வேலையாள்' என்ற பெயருடன் தமது ஜீவியத்தை 'ஆசியா' பத்திரிகையில் எழுதி வருகிறுர். அதில் ஒரு பகுதி இந்தக் கட்டுரை.**

பள்ளிக்கூடத்தை விட்டு, சமயம் கிடைத்த போதெல்லாம் நான் ஓடிவிடுவேன். இருந்தாலும், நேப்பாலி பாஷையிலும், திபெத்திய மொழியிலும் முதல் புஸ்தகம் வாசிக்கத் தொடங்கிவிட்டேன். தெருவில் மற்றப் பிள்ளைகளோடு விளையாடுவதன் மூலமாகத்தான், நான் உண்மையாகக் கல்வி பயின்றேன். எப்படியோ, ஒன்றரை வருஷகாலம் நான் பள்ளிக்கூடத்துக்குப் போய்க்கொண்டு தான் இருந்தேன். ஆனுல், சதா பள்ளிக்கூடத்தை விட்டு ஓடி, என் காலத்தை வீணுக்கிவிட்டேன். அது எவ்வளவு முட்டாள்தனம் என்பதை, எனக்குப் பன்னிரண்டு வயதான போதுதான் உணரத்தொடங்கினேன். முந்தி, என்னுடைய பள்ளித் தோழர்களா யிருந்தவர்கள், நேப்பாலி பாஷையைச் சரளமாய்ப் படிக்கக் கூடியவர்களாகி விட்டார்கள். நன்ருய் ஆங்கிலம் பேசினுர்கள். ஆயாசமில்லாமல் எழுதவும் கற்றுக்கொண்டு விட்டார்கள். என்னுல் இவற்றில் ஒன்றைக் கூடச் செய்ய முடியாது. ஆனுல், ஒன்று. எனக்கு ஆறு ஏழு வயசாயிருந்தபோது இவைகளைப் பற்றி நினைத்ததுகூட இல்லை.

நான் பள்ளிக்கூடத்துக்குப் போவதில்லையென்பது என் சிற்றன்னைக்குத் தெரியும். அதனுல், சில்லறை வீட்டு வேலைகளையெல்லாம் அவள் என்மீது சுமத்தினுள். பாத்திரம் பண்டம் துலக்குவது, தண்ணீர் கொண்டு வருவது, பஜாருக்குப் போவது எல்

லாம் என் வேலை. சமையல் வேலை தவிர மற்ற எல்லா வேலைகளையும் நான்தான், ஒரு வேலைக்காரனைப்போலப் பார்க்கவேண்டும். இது என் தகப்பனுருக்குத் தெரியாது. அவரிடம் சொல்லவும் எனக்குப் பயம். சொன்னுல், நான் பள்ளிக்கூடத்துக்குக் களவடிக்கிறேன் என்று என் தகப்பனுரிடம் சிற்றன்னை சொல்லி விடுவாள் அல்லவா? அது எனக்கு ஆபத்தாய் முடியுமே!

என் அருமைத் தந்தை இனி வேலை பார்க்கத் தேவையேயில்லை. ஏனென்ருல், அவருக்கு நேர்ந்த ஆபத்தில் கால் பழுதாகிவிட்டது. அதனுல் அவர் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டியதாயிற்று. அந்த நாள் முதல் என் சிற்றன்னை என்னைக் கொடுமைக்கு ஆளாக்க முற்பட்டு விட்டாள். எந்த மனிதனும் சரி, பையனும் சரி, இவ்வளவு துன்பத்தைச் சகித்திருக்க மாட்டான். வீட்டு வேலையோ ரொட்டிக் கடை வேலையோ இல்லாவிட்டால், (என் தகப்பனுர் ஆஸ்பத்திரிக்குப் போனதிலிருந்து ரொட்டிக்கடை நின்றுவிட்டது) இரவு பகலாய், அவள் பக்கத்து வீடுகளுக்குப் போய் விடுவாள். அங்கே, தன் சிநேகிதிகளுடன் அரட்டை அடித்துக் கொண்டு சாங் (ஒருவகை மது) குடித்துக் கொண்டு இருப்பாள். மற்றவர்களுக்கு இயற்கை தந்த தண்ணீர் எப்படியோ, அப்படித்தான் இவளுக்கு சாங் மது; நிச்சயமாய் அவள் என்னைப் பராமரிக்கவில்லை. என்னை என்பாட்டில் விட்டு விட்டாள். நன்ருய்க் குடித்துவிட்டு வீட்டுக்கு வந்ததும், குடிவெறி தெளியு மட்டும் என்னைத் திட்டுவாள். சில வேளை என்னைக் குரூரமாய் அடிப்பாள். இரண்டொரு தடவை அவள் என் தகப்பனுரைப் பார்ப்பதற்காக ஆஸ்பத்திரிக்குப் போய்வந்திருக்கலாம். நானே, ஒவ்வொரு நாள் காலையிலும் அவரைப் பார்த்துப் பேசி வருவேன்.

ஒரு விஷயம் மறந்துபோய் விட்டது. என் தகப்பனுர் உடம்பு சுகத்துக்காக வேண்டி இடையிடையே கஞ்சாத் தின்னும் பழக்கம் உடையவர். சிலவேளை நிச்சயமாய்க் கஞ்சா கொஞ்சம் நன்மை செய்யவே செய்கிறது. பழக்கப் பட்டு விட்டால், பின்னுல் அதை விட்டுவிட முடியாது. இதனுல், சப்பாட்டுக்கு முந்தி, தினசரி கொஞ்சம் கஞ்சாத் தின்ன வேண்டி வந்தது. ஆகவே, இடை யிடையே என்னைக் கொஞ்சம் கஞ்சாக் கொண்டுவரச் சொல்லுவார். நான் அவர் சொன்னபடியே செய்து வந்தேன். அடிக்கடி ஒருவருக்கும் தெரியாமல் ரகசியமாய்க் கொஞ்சம் கஞ்சாக் கொடுத்துக் கொண்டு வந்தேன்.

ஆஸ்பத்திரியில் கடுமையான சட்டம் போட்டிருந்தார்கள். மூன்று வாரமாச்சு. கடவுள் கிருபையால் என் தகப்பனுர் வீடு சேர்ந்தார். கால் குணமாகிவிட்டது. ஆனுல், முடமாய்ப் போயிற்று. மறுபடியும், எங்கள் வீட்டில் அவர் கால் வைத்த அந்த நாள் எனக்கு மிகவும் மகிழ்ச்சியான நாள். இருந்தாலும் ஊனமாகிவிட்ட இடது காலால் அவர் நொண்டிக் கொண்டே இருந்தார். பின்னுல் தெருப் பையன்கள் அவரைச் 'சீன வாத்து' என்று அழைக்கத் தொடங்கி விட்டார்கள். ஏனென்ருல், அவர் அசைந்து அசைந்து நடப்பார். விரைவில் கலிம்பொங் ஊர் பூராவும் அந்தக் கேலிப் பெயர் பரவியது. ஆகவே,

என் பேரும், 'சீன வாத்துக் குஞ்சு' என்று ஆகிவிட்டது. எங்களைப் பார்த்து எல்லாப் பையன்களும் "அதோ பாருங்களடா! சீன வாத்தும் அதன் குஞ்சும்!" என்று கத்துவார்கள். என் தகப்பனுரால் ஒன்றும் செய்ய முடியாது. அவரோ, வயதானவர், நொண்டி. அவர்களுடன் , தனியாய்ச் சண்டை போட எனக்குப் போதிய பலமில்லை. ஒரு நாள் எங்கள் வீட்டுக்கு அருகிலுள்ள சாலையில் ஏழெட்டுப் பையன்கள் கோலி ஆடிக்கொண் டிருந்தார்கள். என் நண்பன் பெசியும், நானும் இந்தக் காலிக ளிடையே தூவுவதற்காகக் கம்பளிப் பூச்சியும், காஞ்சொறி இலையும் கொண்டு வரத் திட்டம் போட்டிருந்தோம். இவர்கள்தானே என் தகப்பனுரைக் கேலி செய்தவர்கள். இருக்கட்டும்.

இரண்டு பேருமாய்ப் பாதிரி மாருடைய காட்டுக்குள் சென்ரேும். அங்கே மரத்தூர்களில் நிறையக் கம்பளிப் பூச்சி இருக்கும். இவைகளைச் சேகரித்துக் கொண்டேம். காஞ்சொறி இலையும் பறித்து வந்தோம். இவைகளைச் சிரமப்பட்டு, கொண்டு வந்தோம். தணல் பொறுக்கும் இடுக்கிகளால் இவைகளைப் பறித்தோம். இலைகளையும் பூச்சிகளையும் கைக்குட்டை ஒன்றில் போட்டு, ரகசியமாய்ப் பையன்களிடம் எடுத்துச் சென்ரேும். அவர்களில் ஒருவன் படுமோசமானவன். எப்போது பார்த்தாலும், என் தகப்பனுரை 'வாத்து! வாத்து!' என்று அழைத்து நையாண்டி செய்வான். சத்தப் படாமல் கைக்குட்டையி லிருந்த கம்பளிப் பூச்சியை எடுத்து அவன் கழுத்தில் வைத்து விட்டேன். அது, அவனைத் தொந்தரவு செய்யத் தொடங்கிற்று. அவனுடைய தாயாரை உதவிக்கு அழைத்து, அவன் அழ ஆரம்பித்தான். நானும் பெசியும் கைக்குட்டையைக் கொண்டு காஞ்சொறி இலையின் காம்பைக் கெட்டியாய்ப் பற்றிய வண்ணம் பையன்கள் பக்கம் போனேம். அவர்களிடம், "ஏ, பையன்களா! மறுபடியும் அப்படிச் சொன்னீர்களோ, இன்னெரு தரமும் இப்படியே செய்வோம். ஞாபகமிருக்கட்டும்"! என்று எச்சரித்தோம்.

மறுபடியும் பிஸ்கோத்துச் செய்கிற வேலையில் தகப்பனுர் ஈடுபட்டார். கஷ்டமான வேலை. அப்பாவுக்கு ஓய்வில்லை. எங்கள் சீன விருந்துக்கு ஒரு வாரம் முந்தி, ஒரு நாள் இரவு, என் சிற்றன்னை எழுந்திருந்து, எங்கள் பணம் பூராவையும் (சுமார் 30 ரூபாய்) திருடிக்கொண்டு ஓடிவிட்டாள். என் தகப்பனுர் மறுநாள் அதிகாலையில் எழுந்து பார்த்தபோது, அவள் போய் விட்டாள். ரொக்கப் பெட்டியிலிருந்த பணமும் போய்விட்டது. ஒன்றும் செய்யத் தெரியாமல் அவர் கூச்சலிட்டார். நான் விழித்துக் கொண்டேன். பணம் பூராவும் போய்விட்டதே என்று அவருக்கு வெகு ஆத்திரம். சீனர் சங்கத்துக்கு அவர் போனுர். அவளைப் பிடித்துத் தண்டிக்க அவர்களால் ஏதாவது செய்ய முடியுமா என்று கேட்டார். சீனர் சங்கம் அவருக்கு உதவவில்லை. பிறகு, ஒரு நண்பரிடம் சொன்னுர். விஷயம் பூராவையும் அவரிடம் விளக்கினுர்.

முதலில் கலிம்பொங் ஊர் பூராவும் தேடினேம். அவள் அகப்

படவில்லை. அப்புறம், "டார்ஜிலிங்குக்காவது போய் அவளைத் தேடிப் பார்க்கிறேன்" என்று அந்த நண்பர் சொன்னார். அதற்கு அப்பா "தங்கள் அன்புக்கு வந்தனம்" என்று சொன்னார். நண்பர் வாடகைக்கு ஒரு குதிரை அமர்த்திக் கொண்டு, நேரே டார்ஜிலிங்குக்குப் போனார். குதிரைக்கு நாள் ஒன்றுக்கு 3 ரூபாய் வாடகை.

அதே நாள் மாலையிலேயே நண்பர் திரும்பிவிட்டார். அந்தக் கெட்ட பெண்பிள்ளையிடமிருந்து ஒரு வழியாய் 20 ரூபாய் திருப்பி வாங்கி வந்தார். அந்த 20 ரூபாயைக் கொண்டு திருவிழாவுக்கு வேண்டியதை எல்லாம் அப்பா வாங்கினார். 'வூயட்வான்' திருவிழா என்று இதற்குப் பெயர். ஐந்தாவது சீன மாதத்தில், ஐந்தாவது நாள் வருகிற விருந்து என்று இதற்குப் பொருள். சீனாவில் பழங்காலத்தில் மிகவும் நல்லவரொருவ ரிருந்தார். அவர் இறந்த வருஷக் கொண்டாட்ட நாள் அது. நான் பிறந்த நாளும் அதுவேதான். இந்த நாளில் நான் பிறந்ததனாலேயே என்னை ட்வான் யாங் என்று அழைத்தார்கள்.

அப்பாவும் நானும் சீனர் சங்கத்துக்குப் போனோம். அங்கே ஒரு பெரிய கண்காட்சி வைத்திருந்தார்கள். அதில் ராட்சசப் பாம்பு ஆட்டம் ஒன்றும் நடந்தது. அதில் ஒன்பது பேரும், பல வாத்தியக் காரர்களும் சேர்ந்து ஆடினார்கள். பாம்பாட்டிகள் கலிம்பெங் நெடுகிலும் வீடு வீடாய்ப் பாம்பை எடுத்துச் சென்றார்கள். இவர்கள் போன ஒவ்வொரு வீட்டிலும் பாம்பு நடனத்தைப் பார்ப்பதற்காக இரண்டு மூன்று ரூபாய் கொடுத்தார்கள். பட்டாசு சுட்டார்கள். நடுநிசி வரை வாத்யம் முழங்கிற்று. எங்கள் வீட்டில், இரவில் அப்பா ஒரு கட்டுப் பட்டாசு சுட்டார். ஒரு கத்தை கடுதாசிப் பணத்தை நெருப்பிலிட்டார். பிறகு முழந்தாளிட்டுக் கன்பூசியசுக்குப் பிரார்த்தனை செய்தோம். இறந்து போன எங்கள் உறவினர்களை அழைத்து, சொர்க்கத்தி லிருக்கும் அவர்களுக்கு எங்கள் அன்பைச் செலுத்தினோம்.

எங்களோடு என் சிற்றன்னை வாழ்ந்த வாழ்வு சுமார் ஒன்றரை வருஷத்தோடு முடிந்தது.



## கூட்டம் எங்கே கூடும்?

இங்கிலாந்து சரித்திரத்திலேறிய ஒரு மகாவீரன் ஆலிவர் கிராம்வெல். அவர் பல யுத்தங்களை வென்ற ஸோல்ஜர். முதல் சார்லஸ் மன்னரைச் சிரச்சேதம் செய்தவர். பார்லிமெண்டை, துப்பாக்கி முனையைக் காட்டிமிரட்டிக் கலைத்தவர். தாமே சர்வாதிகாரியாய், ஆட்சிபுரிந்தவர்.

ஒரு சமயம் வெளிநாட்டில் ஒரு யுத்தத்தில் வென்று, ஜயசீலராய்த் தாயகம் திரும்பினார். அளவிறந்த ஜனக்கூட்டம் கூடி, அவரை வரவேற்றது. அப்போது, அவருடைய ராணுவ தளகர்த்தர்களில் சிலர், "இவ்வளவு கூட்டம் கூடியிருக்கிறதே. ஜனங்களுக்கு உங்களிடம் உள்ள அன்பை இதுகாட்டுகிற தல்லவா?" என்று கேட்டார்கள்.

"அல்ல, அல்ல. கூட்டத்துக்கென்ன? நாளைக்கு என்னை யாராவது சிரச்சேதம் செய்வதானால், அதைப் பார்க்கவும் இதற்கு மேலே பெரிய கூட்டம் கூடிவிடும்" என்றார் கிராம்வெல்.

# வைரத் தோடு

சுப்பராவ்

"வைரத் தோட்டை விற்கவே கூடாது. நான் கொடுக்க மாட்டேன். வாங்கி இரண்டு கலியாணத்துக்குப் போட்டுப் பார்க்கவில்லை. பத்து நாளில் என் தங்கை கலியாணம் வருகிறது. இதற்குள்ளேயே விற்கிறேன் என்கிறீர்களே! உங்கள் நெஞ்சு என்ன நெஞ்சு! ஊஹூம்! நான் தரமாட்டேன்" என்றாள் மாது ஸ்ரீ பங்கஜத்தம்மாள்.

"அப்படியா! பார்க்கலாம். அதை விற்றுத்தான் ஆகவேண்டும்" என்று கர்ஜித்தார் பிரம்ம ஸ்ரீ வாசுதேவையர்.

வாசுதேவையருக்கு ஓர் அவசர முடை. ஒரு பழங் கடனை அடைக்க, உடனே ரூபாய் 500 தேவையாயிற்று. மனைவியின் வைரத் தோடுதான், அந்த முடையைத் தீர்க்கக் கூடிய சஞ்சீவியாக அவருக்குத் தோன்றியது. ஆனால், பல வருஷ காலம் ஓயாமல் ஜபம் செய்து அரும்பாடுபட்டு வாங்கிய வைரத் தோட்டை விட்டுப்பிரிய, பங்கஜத்துக்குத் துளிக்கூட மனமில்லை.

ஐயருக்கு நேரமாகி விட்டது. ஆபீசுக்குப் புறப்பட்டார். அங்கே அவருக்கு வேலை ஓடவேயில்லை. வைரத் தோட்டை எப்படியாவது மனைவியிடமிருந்து இரகித்து விற்பனை செய்யவேண்டும், அதற்கு என்ன வழி என்ற ஒரே யோசனையில் ஏகாக்ர சிந்தையோடு ஈடுபட்டிருந்தார். கடைசியாக ஒரு வழி புலப்பட்டது. அந்த வழியில் காரியத்தை நிறைவேற்றுவதற்காக, சாயுங்காலம் ஆபீஸ் விட்டதும், நேராகத் தம் நண்பர் கீர்த்திலால் வீட்டுக்குப் புறப்பட்டார். கீர்த்திலால், ஒரு பிரபல வைர வியாபாரி.

"கீர்த்திலால்ஜீ, ஆறு மாசத்துக்கு முன்னே தங்களிடம் ஒரு ஜதை வைரத்தோடு வாங்கினேனே, ஞாபகமிருக்கிறதா?"

"ஆமாம், அதற்கென்ன? அருமையான கல். இப்போது அந்த மாதிரி கல்லுகள் எங்கே தேடினாலும் கிடைக்காது, சுவாமி."

"அது சரி, லால்ஜீ. ஆனால், அந்தத் தோடு நமக்குப் பிராப்தியில்லை......"

"என்ன! என்ன!! கெட்டுப் போய் விட்டதா?"

"இல்லை யில்லை, அதை நான் விற்கவேண்டி நேர்ந்திருக்கிறது. எனக்கு ஒரு பெரிய முடை. அந்தத் தோட்டைத்தான் விற்க வேண்டும். நீங்களே விற்றுத் தரவேண்டும்."

"ஐயோ பாவம்! எதற்கும் பிராப்தம் வேண்டாமா? விற்றால் போச்சு."

"விற்பதும் அவ்வளவு சுலபமல்ல."

*வைரத் தோட்டை விற்க விரும்பிய வாசுதேவையர், ஒரு தந்திரத்தைக் கையாள விரும்புகிறார். இமிடேஷன் தோடு புகுந்து, கதையை எப்படித் தலை கீழாய் மாற்றி விடுகிறது! எளிய குடும்ப சம்பவம் தான். ஆனாலும், என்ன உருக்கமான நிகழ்ச்சி!*

"என்? அதைப்பற்றி உங்களுக்குக் கவலை வேண்டாம். நான் விற்றுத் தருகிறேன். இந்த நிமிஷமே விற்றுத் தருகிறேன்."

"அதைச் சொல்லவில்லை. என் மனைவி அதைக் கொடுக்கமாட்டேன் என்கிருள். அவளை மீறிப் பலவந்தமாய் அதை எடுத்து வந்தால், வீடு எழவு பட்ட பாடாகிவிடும். அவளை ஏமாற்ற ஓர் உபாயம் செய்ய வேண்டும். அதாவது, இந்த வைரத்தோடு மாதிரியே இமிட்டேஷன் கல் தோடு ஒன்று நீங்கள் செய்து தரவேண்டும். அதை அவளுக்குத் தெரியாமல் வீட்டிலே கொண்டு போய் வைத்து விட்டு, நிஜத் தோட்டை எடுத்து வந்து விடுகிறேன்" என்ருர் வாசுதேவையர்.

"சரி; ஒரு வாரம் பொறுங்கள். அப்படியே செய்து தருகிறேன்" என்ருர் லால்ஜீ.

ஐயர் சந்தோஷமாக வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தார். ஒன்றுமே நடவாதது போல், ஐயர் சாந்தமாய் நடந்து கொண்டது பங்கஜத்துக்கு ஆச்சரியமாய்த் தான் இருந்தது. ஆனல், அவள் மகா அன்போடு தம்மிடம் நடந்து கொண்டது ஐயருக்கும் ஆச்சரியமாகவேயிருந்தது. வைரத் தோட்டைப் பற்றிய பேச்சே இல்லாமல், இப்படியாகத்தானே ஐந்து நாட்கள் பரம சமாதானத்திலே கழிந்தன. இடையிடையே ஒரு கடன்காரன் மட்டும் வந்து, ஐயரைத் தொல்லைப்படுத்திக் கொண்டிருந்தான். அவரும் "இதோ, அதோ, பொறுத்தது பொறுத்து விட்டீர்கள். இன்னும் இரண்டு நாள்" என்று தவணை சொல்லி வந்தார். இதையெல்லாம் பங்கஜமும் பெருமூச்சுடன் மௌனமாய்க் கவனித்துக்கொண்டுதானிருந்தாள்.

ஐந்தாவது நாள் மாலையில், ஐயர் ஆபீசிலிருந்து வந்ததும், பங்கஜம் மிக்க சுமுகமாய், ஒரு ஜதை தோட்டை ஐயரின் முன்பு வைத்தாள்: "உங்கள் கஷ்டம் எனக்குத் தெரியாமல் இல்லை. தோட்டை விற்றுவிடுங்கள். பிழைத்து மூளைத் திருந்தால், தோட்டுக்கா பஞ்சம்? உங்கள் கஷ்டத்துக்கு உதவாத தோடு வேறே எதற்கு? விற்றுக் கடனை அடையுங்கள்" என்ருள்.

ஐயருக்கு ஒன்றும் புரியவில்லை. ஒரு புறம் பேராச்சர்யம்; மறு புறம் பரம சந்தோஷம். கடன்காரனுக்கு இரண்டு நாள் தவணை குறைந்தது; மனைவியை ஏமாற்றும் நிர்ப்பந்தம் இல்லாது போகிறது. யார்தான் சந்தோஷப்பட மாட்டார்கள்? ஐயர் தோட்டை எடுத்துக் கொண்டு, உடனே தம் தோழர் லால்ஜீயின் வீடு தேடிச் சென்ருர்.

லால்ஜீ வைரத்தைப் பார்த்தார். உடனே, அவர் முகம் சுளித்தது. "என்ன ஐயரே! நம்மையே ஏமாற்றப் பார்க்கிறீரே! பழைய தோடுதானே என்று எண்ணிக் கவனிக்காமலே இவன் எடுத்துக் கொள்வான் என்று நினைத்தீரோ?" என்று உறுமினர்.

ஐயருக்கு இது ஏதோ புதிர்ப் போட்டாற்போல் இருந்தது. அவர் மலைத்துப் போனர்: "லால்ஜீ, தாங்கள் சொல்வது ஒன்றும் எனக்குப் புரிய வில்லையே" என்ருர்.

"புரியுமா, சுவாமி; புரியுமா! இது இமிட்டேஷன் தோடு. மனைவியை ஏமாற்றப் போகிறேன் என்றவர், இப்போது என்னையே

ஏமாற்ற வந்து விட்டீரே!" என்றார் லால்ஜீ.

ஐயர் பதைத்துப் போனார். "தெய்வ சாட்சியாய்ச் சொல்லுகிறேன். மனைவி கொடுத்த தோடு இது. அப்படியே உங்களிடம் கொண்டு வந்தேன்" என்றார் ஐயர்.

சற்று நேரம் இருவரும் பேசவில்லை. மௌனமாய்த் தனித் தனியே யோசனை செய்து கொண்டிருந்தார்கள். பிறகு, லால்ஜீ சொன்னார்: "ஐயரே, அப்படியானால், அம்மாள் உம்மையோ அல்லது அம்மாளை யாரோ ஏமாற்றியிருக்கவேண்டும். இது இமிடேஷன் வைரம் என்பதில் மாத்திரம் உமக்குச் சந்தேகமே வேண்டாம்."

ஐயரும் யோசனை செய்தவர் தானே. அவருக்கு மனைவியிடமே சந்தேகம் வந்தது. தம்மைப் பங்கஜம் ஏமாற்றி விட்டாள் போலிருக்கிறது! இவ்வளவு துணிச்சலா அவளுக்கு? ஒருகால் நிஜ வைரத் தோட்டை எங்கே யாவது தொலைத்திருப்பாள்; அதை மறைக்க இமிடேஷன் வைரத்தோட்டை வாங்கி, எப்படியாவது இவரிடம் கொடுத்துத் தட்டிக் கழித்துக் கொள்ள எண்ணியிருக்கலாம். ஆமாம், எது எப்படியானாலும், இது இமிடேஷன் தான். அவள் தெரிந்தே இதைத் தம்மிடம் கொடுத்திருக்கிறாள். இல்லாவிட்டால், பங்கஜமா நிஜ வைரத் தோட்டை இவரிடம் இவ்வளவு சமாதானமாய்க் கொடுக்கிறவள்? எதற்கும் இதில் ஒரு கை பார்த்துவிடவேண்டும் என முடிவு செய்துகொண்டார்.

லால்ஜீயிடம் ஐயர் சொன்னார்: "நீங்கள் சொல்வது சரி. பங்கஜம்தான் என்னை ஏமாற்றியிருக்கிறாள். பரவாயில்லை. நீங்கள் எனக்கு ஓர் உதவிசெய்ய வேண்டும். நிஜ வைரத்துக்கும் இமிடேஷன் கல்லுக்கும் என்ன வித்தியாசம்? அதை மாத்திரம் நான் கண்டு பிடிக்கக் கூடியபடி, ஏதாவது அடையாளம் சொல்லித் தருவீர்களா?"

ஐயருக்கு லால்ஜீ வைரத்தைப் பற்றிய ஒரு ரகஸ்யத்தைச் சொல்லிக் கொடுத்தார்: "நிஜ வைரம் இருட்டிலே இருக்கும் போது, ஏதாவது துளி வெளிச்சம் பட்டாலும் ஜிலுஜிலு என்று ஜொலிக்கும். இந்தச் சக்தி இமிடேஷன் கல்லுக்குக்கிடையாது" என்றார் லால்ஜீ.

இந்தச் சூட்சுமத்தை மனதிலே முடிபோட்டுக் கொண்டு, வீடுவந்து சேர்ந்தார் ஐயர்.

மனைவி பங்கஜம் வீட்டு வாசலிலே நின்றுகொண் டிருந்தாள்: "என்ன, விற்றாச்சா?" என்று ஆவலோடு கேட்டாள்.

"ஆச்சு" என்று கமுக்கமாகத் தலையை ஆட்டினார் ஐயர். ஆனால், அவர் கண்களின் கள்ளப் பார்வை மட்டில் அவளுடைய காதுகள் மீது சென்றன. பங்கஜத்தின் காதுகளிலே, வைரத் தோடு இல்லை; பழைய எளிய சிவப்புத் தோடுதான் இருந்தது.

இருக்கட்டும். மச்சினி கலியாணம் வர இன்னும் பத்து நாள்தானே இருக்கிறது? வைரத் தோடு இருந்தால், பங்கஜம் அதை அப்போது அணிந்து மினுக்காமல் விடுவாளா? 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளில் தெரியும்' என்றபடி, ரகஸ்யம் அப்போது தெரிந்துவிடுகிறது- இது ஐயரின் முடிவு.

அந்தப் பத்து நாளும் உள்ளுக்குள்ளே ஐயர் கறுவிக் கொண் டிருந்தாரே யொழிய, வெளிக்கு வெகு கலகலப்பாகவே நடந்துகொண்டார்.

பங்கஜத்தின் தங்கை அம்புஜத்தின் கலியாணம் வந்து சேர்ந்தது. அமக்களமாக மாப்பிள்ளை அழைக்க ஏற்பாடுகள் நடந்து கொண் டிருந்தன. வாசுதேவையர் மட்டில் ஒன்றிலும் கலவாமல் தமது கருமமே கண்ணாய், வீட்டு ரேழியிலே, இருட்டிலே பங்கஜம் 'எப்போது வருவாள், வருவாள்?' என்ற ஒரே எண்ணத்தோடு எதிர்பார்த்துக் காத்துக்கொண் டிருந்தார்.

வெகு நேரம் வரையில் யாராரோ பெண்கள் 'கலீர்' என்று சிரித்து விளையாடி உள்ளும் புறமும் நடமாடிக்கொண் டிருந்தார்கள். 'ரேழியிலே திருடனா?' என்று கூட யாரும் இவரைக் கவனிக்க வில்லை. வீடெல்லாம் அவ்வளவு குதூகலம். இவர் மட்டில் 'கொட்டடா, குடையடா' என்று ரேழியிலே, தவம் செய்யும் கொக்கைப் போல, சிலை மாதிரி கண் கொட்டாமல் நின்று கொண்டிருந்தார்.

கடைசியில், பங்கஜம் வந்துவிட்டாள். ஆம், அவள் தான். அவள் காதிலே இருப்பது வெள்ளைத் தோடு என்பதில் சந்தேகமில்லை. இதோ ரேழி நிலைப்படியில் நுழைகிறாள்! இஸ்ஸ்! 'பளீர்' என்று டாலடிக்கிறதே! இது வைரமேதான்.

வாசுதேவையர் பல்லைக் கடித்தார். புலிபோல் பாய்ந்து, அவள் கழுத்தை அப்படியே நெறித்து விடலாமா என்று அவருக்கு ஆத்திரம் வந்தது. ஆனாலும், கலியாண வீட்டில் கலாட்டாவாகி விடுமே என்று அஞ்சினர்.

நிதானம் தவறிப் போகாமலே, அழுத்தமான குரலில், "பங்கஜம், நில்" என்று சொல்லி, அவளுக்கு எதிரே போய் நின்று கொண்டார்.

பங்கஜத்துக்கு ஒன்றும் புரியவில்லை. கணவன் ஏதோ ஒரு விதமா யிருக்கிறார் என்று மட்டில், அவளுக்குத் தோன்றியது. சிரமப்பட்டுச் சிரித்துக் கொண்டே, "ஏன்? என்ன? எல்லாரும் புறப்பட்டு விட்டார்களே. நீங்கள் மாத்திரம் இப்படி இங்கே..." என்று ஏதோ சொல்ல முயன்றாள்.

"அது கிடக்கட்டுமடி, கள்ளி. இதோ இந்த வைரத்தோடு ஏது உனக்கு!" என்று அவள் காதை ஐயர் ஒரு சுண்டுச் சுண்டினர்; "இமிட்டேஷன் தோட்டைக் கொடுத்து, என்னை அவமானம் தானே செய்தாய்!" என்று, இரையமுடியாமல், அடித்தொண்டையோடு மெல்ல உறுமினர்.

பங்கஜத்துக்கு அப்போது தான் சந்தேகம் வந்தது. "அப்படியானல், உங்களிடம் நான் கொடுத்தது இமிட்டேஷன் கல்லா! நிஜவைரம் இதுதானா?" என்று கேட்டாள்.

"ஆமாமடி, நீலி. ஒன்றும் தெரியாததுபோல் கதைக்கிறாயே!" என்று கத்தினர் ஐயர். மேலும், கண்டபடி திட்டத் தொடங்கினர்.

பங்கஜம் கண்ணீர் விட்டுக் கொண்டே, "நான் நிரபராதி. சற்றுப் பொறுமையாய் அப்பால் வாருங்கள். எல்லாம் விவரமாய்ச் சொல்லுகிறேன்" என்றாள்.

"அதையும் பார்க்கலாம்; என்னதான் சொல்லுகிறாயோ, கேட்கிறேன்" என்று, ஐயர் கொஞ்சம் சாந்தம் அடைந்தார்.

யாரும் இல்லாத கொல்லை ரேழிப் பக்கம் இருவரும் சென்றார்கள்.

பங்கஜம் சொன்னாள்: "அன்று நீங்கள் கோபித்துக் கொண்டு போன பிறகு, நான் யோசித்துப் பார்த்தேன். உங்கள் கஷ்டத்தை நினைத்துப் பார்த்தேன். இப்போது கடன் தீர்ந்தால், பின்னால் வைரத்தோடு வாங்குவதா பெரிசு என்று எண்ணினேன். ஆனால், பல பேருக்கு நாம் வைரத் தோடு வாங்கியது தெரியும். விற்றுவிட்டோம் என்றால், பெண்பிள்ளைகள் வம்பளப்பார்களே என்று வெட்கமாயிருந்தது. நம்முடைய தோட்டைப்போலவே ஓர் இமிட்டேஷன் தோடு, அஞ்சலூர் லலிதாவிடம் இருந்தது. அதை விலைக்குக் கேட்டேன். அவள் தந்தாள். இருபத்தஞ்சு ரூபாய். இன்னும் பணம்கூடக் கொடுபடவில்லை. இரண்டு தோடுகளையும் ஒரே பெட்டியில் வைத்திருந்தேன். தவறுதலாய் இமிட்டேஷன் தோட்டை உங்களிடம் கொடுத்து விட்டேன் போலிருக்கிறது. நீங்களே என்னை இப்படிச் சந்தேகித்தால், இனி எனக்கு யார்தான் அடைக்கலம்?" என்று சொல்லி, மேலே பேச முடியாமல் தாரை தாரையாய்க் கண்ணீர் சொரிந்து விட்டாள்.

ஐயருடைய மனம் சங்கடப் பட்டது. அவள் சொல்லுவது நிஜம் என்று, அவரது அந்தராத்மா சொல்லியது. ஆனால், "ஏன் இது நீலித்தனமாயிருக்கக் கூடாது?" என்று அறிவிலே ஒரு புரை யோடியது.

இச்சமயம் யாரோ அங்கே வரும் காலடிச் சத்தம் கேட்டது. உடனே, பங்கஜம் கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள். கணவனும் மனைவியும் சகஜமாகப் பழகுவது போலப் பாவனை செய்து கொண்டு, இருவரும் ஜாக்கிரதைப் பட்டார்கள்.

வந்தது வேறு யாருமல்ல; அஞ்சலூர் லலிதாதான். அவள் இவர்களைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே, "மாமா, பாருங்கள்; மாமியை நன்றாய்ப் பாருங்கள். நீங்கள்தான் வைரத் தோட்டை விற்று விட்டீர்களாமே. நான் கொடுத்திருக்கிற இந்த வெள்ளைத் தோடு, மாமிக்கு எவ்வளவு அழகாயிருக்கிறது, பார்த்தீர்களா? மகாலட்சுமி மாதிரி இருக்கிறாள் மாமி! மாமீ, நாளைக்கு ரூபாய் இருபத்தஞ்சையும் கொடுத்துவிட வேண்டும். இல்லையோ இந்தத் தோட்டைக் கழற்றிக் கொடுத்துவிட வேண்டும், பார்த்துக்கொள்ளுங்கள்" என்றாள்.

ஐயரின் தொண்டையை ஏதோ வந்து அடைத்துக் கொண்டது. அவர் பேசாமல் வெளியே போய்விட்டார்.

அன்று இரவு ஐயரும் பங்கஜமும் ஏகாந்தமாய் இருந்த நேரத்தில், ஐயர் பங்கஜத்தின் கூந்தலைக் கோதி விட்டுக்கொண்டே, "பங்கஜம், எனக்கு இனி என்ன கொடிய கஷ்டம் வந்தாலும் சரி, உன் வைரத் தோட்டை மட்டுமல்ல; உன் நகை எதையுமே தான், என் கையால் விற்கவே மாட்டேன். இது மாத்திரம் உறுதி" என்றார்.



ப் 46

# சோல்பரி திட்டம்

ஆர். எச். நாதன்

ஜப்பானிய பாஸிஸ்டுகள் தென் கிழக்கு ஆசியாவிலுள்ள நாடுகளைத் தாக்கியபொழுது, பொது ஜனங்களின் நம்பிக்கையையும், ஆதரவையும் பெறாத பிரிட்டிஷ், டச்சு, பிரஞ்சு ஏகாதிபத்தியங்கள் தாக்குப் பிடிக்க முடியாமல் சுதேச மக்களை நடுத்தெருவில் விட்டுவிட்டு, ஓட்டம் பிடித்தன. 1941-ம் வருடம் டிசம்பர் மாதம் 7-ந் தேதி இரவு இந்த ஏகாதிபத்தியங்களின் ஆதிக்கத்தின் கீழ் உறங்கப்போன மக்கள், ஜப்பானிய பாஸிஸ்டுகளின் கொடிய ஆட்சியின் கீழ் மறுநாள் காலையில் விழித்தெழுந்தனர். சுதேச மக்களை நம்பாத, சுதேசமக்களுக்கு அதிகாரத்தை அளிக்காத ஏகாதிபத்தியங்களின் மானம் கப்பலேறிற்று. ஏகாதிபத்திய முறைக்கு இனி இடமளிக்கக் கூடாதென்ற எண்ணம் ஆசிய மக்களின் மனத்தில் இரண்டறக் கலந்தது.

சிலோனின் கதவை முட்டிக் கொண்டிருந்தார்கள் ஜப்பானிய பாஸிஸ்டுகள். மலேயா வழிச் செல்ல மக்கள் மறுத்தார்கள். சிங்களவர், யாழ்ப்பாணத் தமிழர், இந்தியர் முதலிய சகல தேசிய இனங்களும் பூரண சுதந்தரம் வேண்டுமென்று பெருத்த கிளர்ச்சி செய்தார்கள். குடியேற்ற நாட்டந்தஸ்தே போதுமென்று திருப்தியடைந்திருந்த இலங்கை தேசிய காங்கிரஸையும் இந்தச் சுதந்தர வேகம் ஓர் உலுக்கு உலுக்கிற்று. மிதவாதிகளின் கோட்டை இடிந்து விழுந்தது. 1942-ம் வருடம் கெலனியாவில் நடந்த கூட்டத்தில், பூரண சுதந்தரம்தான் லட்சியம் என்று இலங்கை தேசிய காங்கிரஸ் பிரகடனம் செய்தது. டி. எஸ். சேனநாயகா போன்ற மிதவாத ஏகாதிபத்திய தாசர்கள் சுதந்தரப் பிரகடனத்தைக்கண்டு, வெருண்டு, காங்கிரஸை விட்டு ஓடினார்கள். ஆயினும், பொது ஜன சுதந்தர இயக்கம் வளர்ந்து வலிமை பெற்றது. சிலோன் கம்யூனிஸ்டுகளும், ஏனைய ஏகாதிபத்திய எதிர்ப்பாளர்களும் காங்கிரஸில் சேர்ந்து, சுதந்தர கோஷத்தை நாடெங்கும் முழக்கி, மக்களைத் தட்டியெழுப்பினார்கள். எனவே, 1943-ம் வருடம் மே மாதத்தில் ஒரு புதிய அரசியல் திட்டத்தைப் பிரிட்டிஷ் ஏகாதியத்தியம் பிரகடனம் செய்தது. சிலோன் கம்யூனிஸ்டுக் கட்சியின் பொதுக் காரியதரிசி தோழர் பீட்டர் கொனமன் கூறுவது போல், "சிலோனில், பிரிட்டனின் அரசியல், பொருளாதார, ராணுவப் பிடிப்பைப் பலப்படுத்தும் பொருட்டும், மிதவாதிகளதும், சந்தர்ப்பவாதிகளதும் ஒத்துழைப்பைப் பெற்று, இழந்த கௌரவத்தைத் திரும்பவும் பெறும் பொருட்டும்", சோல்பரி

இலங்கைக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் 'கருணை கூர்ந்து' அனுப்பிய ஒரு விசாரணைச் சபைக்கு ஸோல்பரி கமிஷன் என்று பெயர். அது செய்துகொண்ட அறிக்கையை அனுசரித்துத் தயாரிக்கப்பட்ட இலங்கையின் புதிய அரசியல் திட்டத்துக்கு ஸோல்பரி திட்டம் என்று பெயர். இதைச் சிங்களவர் பலரும் ஒருவகையாய் அங்கீகரிக்கிறார்கள். ஆனால், கம்யூனிஸ்டுகள் இதைக் கண்டிக்கிறார்கள். அதன் காரணத்தை விளக்குகிறது இந்தக் கட்டுரை.

கமிஷன் பகிரங்கமாகக் கூறியது போல், தீவிரவாதிகளின் செல்வாக்கைக் குறைக்கும் பொருட்டும், இந்தப் பிற்போக்கு அரசியல் திட்டத்தைச் சிலோனுக்கு அளித்தது.

சேனநாயகா போன்ற பிற்போக்காளர்கள், இதை ஏற்க வேண்டுமென்று தீவிரமாகப் பிரசாரம் செய்தார்கள். சிலோனிலுள்ள சிறுபான்மையோர், ஐம்பதுக் கைம்பது (சம)ஸ்தானங்கள் வேண்டுமென்று கோரினர்கள். ஏகாதிபத்தியத்தின் சூழ்ச்சி பலித்தது. சிலோனிலுள்ள சிங்களவர், யாழ்ப்பாணத் தமிழர், இந்தியர்கள் முதலிய முக்கியமான தேசிய இனங்களிடையே பிளவு பெருகிற்று.

இந்தப் பிளவை இன்னும் பன்மடங்கு அதிகரிக்கும் பொருட்டுச் சோல்பரி தூது கோஷ்டியொன்று சிலோனுக்கு வந்தது. அரசியல் திட்டத்தை எப்படித் திருத்தியமைப்பது என்பதை நேரிடையாகப் பரிசீலனை செய்வதற்காக வந்ததாம்!

இந்தத் தூது கோஷ்டி சிலோனுக்கு வந்த பொழுது, சகல தேசிய இனங்களும் ஒன்று சேர்ந்து, ஏகாதிபத்தியத் தூது கோஷ்டியிடம் பூரண சுதந்தரக் கோரிக்கையைச் சமர்ப்பிக்கும்படி சிலோன் கம்யூனிஸ்டுக் கட்சி கோரியது. ஆனால், இலங்கை தேசிய காங்கிரஸும் (பெரும்பாலோர் சிங்களவர்கள்) இலங்கைத் தமிழர் காங்கிரஸும் (யாழ்ப்பாணத் தமிழர்கள்) இலங்கை இந்தியர் காங்கிரஸும் (இந்தியர்கள்) தனித்தனியே சட்டசபையில் அதிக ஸ்தானங்களைப் பெற, சோல்பரி தூது கோஷ்டியிடம் காவடி எடுத்தன. சுருங்கக் கூறின், சகோதர மக்களை நம்பாமல், ஏகாதிபத்தியத்திடமிருந்து நியாயத்தை எதிர்பார்த்தார்கள்! இறுதியில், பிரித்தாளும் ஆட்சி என்ற குட்டையில் ஊறித் தடித்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அனைவருக்கும் பட்டை நாமத்தைச் சார்த்திற்று. சிறுபான்மையோர் கோரிய ஐம்பதுக் கைம்பது ஸ்தானங்களும் கொடுக்கப்படவில்லை; சுதந்தரமும் கொடுக்கப்படவில்லை. 1945-ம் வருடம், அக்டோபர் மாதம் 31-ந் தேதியன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இறுதியாகப் புதிய பிற்போக்கு அரசியல் திட்டத்தைப் பிரகடனம் செய்தது.

தோழர் பீட்டர் கெனமன் கூறுவது போல், "ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கத்தைத் தேசத்தில் நிரந்தரமாக நிலைநாட்டுவதற்காகத்தான் இந்தத் திட்டம் வகுக்கப்பட்டது. இத்துடன் தேசிய இனங்களும், சமூகங்களும் ஒன்றோடொன்று முட்டி மோதுவதற்கு, இது தூபம் போட்டது......"

இந்தப் புதிய அரசியல் திட்டப்படி, இரண்டு சபைகள் அமைக்கப்படும். கீழ்ச் சபையிலுள்ள 101 அங்கத்தினர்களில், 6 பேர்களைக் கவர்னர் நியமிப்பார். ஏனையவர்கள் பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். மேல் சபையிலுள்ள (செனட்) 30 அங்கத்தினர்களில் 15 பேர்களை கீழ்ச் சபை தேர்ந்தெடுக்கும். ஏனையவர்களை, கவர்னர் நியமிப்பார். பொதுஜனங்களால் தேர்ந்தெடுக்கப் படாத, கவர்னரால் பொறுக்கி யெடுக்கப்பட்ட இந்தப் பதினைந்துபேர்கள் யாரா யிருப்பார்கள்? பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் தாசானு தாசர்களாகவே இருப்

பார்கள் என்பதைக் குறிப்பிட வேண்டிய அவசியமே யில்லை. எனவே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், மேல் சபையின் மூலமாக, பொது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட கீழ்ச் சபையை நசுக்க ஒரு புதிய செனட்டைத் தனக்குச் சாதகமாக அமைத்திருக்கிறது.

தேசப் பாதுகாப்பு, வெளி நாட்டு விவகாரங்கள் ஆகியவைகள் சம்பந்தமான அதிகாரங்கள் கவர்னரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. பொது மக்கள் தங்களுடைய விருப்பத்தைத் தெரிவிக்க யாதோர் அவகாசமும் அளிக்கப்படவில்லை. தன்னுடைய நல உரிமைகளைப் பாதுகாக்கப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்கிறதோ, அதே நடவடிக்கைதான் சிலோனிலும் கையாளப்படுவது. மேலும், வியாபார ஒப்பந்தங்கள், செலாவணி, இலங்கையில் குடியேறுதல் சம்பந்தமான விஷயங்கள் முதலிய முக்கியமான பிரிவினைகளில் கவர்னருக்கு அபரிமிதமாக அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அரசியல் திட்டத்தை மாற்றியமைக்கும் உரிமை, சட்டசபைக்குக் கிடையவே கிடையாது.

"சிறு பான்மையரோ, அல்லது, பெரும்பான்மையரோ தாங்கள் விரும்பியதைப் பெறவேயில்லை; பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம்தான் வெற்றி பெற்றிருக்கிறது. எவ்வாறெனில், அவர்கள் கோரிய சகல அதிகாரங்களும் அவர்களிடமே இருக்கின்றன. நம்மிடையே யுள்ள பிளவைக் கெட்டிக்காரத் தனமாகப் பயன் படுத்திக்கொண்டு, பிரிட்டிஷ் சர்க்கார் வெற்றி பெற்றிருக்கிறது," என்று சிங்கள மஹாசபையின் தலைவர் பண்டாரநாயகா அந்தச் சபைக்குச் சமர்ப்பித்த யாதாஸ்தில் குறிப்பிடுகிறார்.

சிலோனின் பக்கத்துச் சகோதர நாடுகளில்— இந்தோனேஷியாவிலும், இந்தோ சைனாவிலும்— பூரண சுதந்தரத்திற்காக மக்கள் ஆயுதப் போராட்டத்தைத் தீவிரமாக நடத்திவரும் பொழுது, மலேயாவிலும், பர்மாவிலும் உள்ள மக்கள் பூரண சுதந்தரத்தைத் தவிர, வேறு யாதொன்றையும் ஏற்கமாட்டோமென்று ஒன்றுதிரண்டு, போர்முரசு கொட்டும் பொழுது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு, இத்தகைய பிற்போக்கு அரசியல் திட்டத்தைச் சிலோன் மக்கள் முன்பு சமர்ப்பிக்க எங்கிருந்து துணிச்சல் வந்தது? ஒரே வார்த்தையில் இதற்குப் பதிலளிக்கலாம். சிலோனிலுள்ள மக்களிடையே ஒற்றுமையில்லை. யாவரும் ஒன்று சேர்ந்து பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைத் தாக்கவில்லை. எனவே, இந்தப் பிளவை, இந்தப் பலஹீனத்தை ஏகாதிபத்தியம் முழுக்க முழுக்க உபயோகப் படுத்திக்கொண்டது. சென்ற வருட இறுதியில், இலங்கை தேசிய காங்கிரஸ் இந்தப் பிற்போக்குத் திட்டத்தை ஏற்றுக்கொண்டது. (கம்யூனிஸ்டுகள் முதலிய முற்போக்கு வாதிகள் ஏற்க மறுத்தனர். ஆனால், பெரும்பாலானவர்கள் ஏற்க வேண்டுமென்று வோட் அளித்தனர்). பூர்ண சுதந்தரத்திற்காக ஜாவா மக்களும், அன்னமியர்களும் உயிர்த் தியாகம் செய்து, பல மாதங்களாகப் பல ஏகாதிபத்தியங்களை எதிர்த்துப் போராடி வரும் பொழுது, சிலோன் தேசிய காங்கிரஸ் இந்த அடிமைச் சாஸனத்தை ஏன் ஏற்றுக்கொண்டது? சிறு பான்மை

யோர் கோரிய ஐம்பதுக் கைம் பது ஸ்தானங்களைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அங்கீகரிக்காத தால், சிலோனில் பெரும் பான்மையோரான சிங்களவர் கள் நிறைந்த சிலோன் தேசிய காங்கிரஸ், இதைத் தன்னுடைய வெற்றியாகக் கருதிற்று. சகோ தரர்களுக்குள்ளே நடந்த சண் டையில் பூர்ண சுதந்தரக்கோரிக் கையைக் காற்று வாக்கில் பறக்க விட்டது!

சகோதரர்களுக்குள்ளே நடக் கும் சண்டையையும், மனக் கசப்பையும், அவ நம்பிக்கையை யும் தவிர்த்து, யாவருக்கும் நியா யம் வழங்கி, ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடச் சகல மக் களையும் உட்கொண்ட ஏகாதிபத் திய எதிர்ப்பு ஐக்கிய முன்ன ணியை நிறுவச் சிலோன் கம்யூ னிஸ்டுக் கட்சி ஜனநாயக முறை யில் வழி வகைகளை வகுத்திருக் கிறது. அதாவது, சகல மக்க ளுக்கும் வோட் உரிமை அளிக் கப்படவேண்டும்; சம அந்தஸ் துள்ள இரண்டு சபைகளை நிறுவ வேண்டும்; ஒன்று சகல தேசிய இனங்களின் சபை; மற்றொன்று சகல மக்களுக்கும் உரிய பொது வான பிரதிநிதிச் சபை.

இந்தப் பணியைத் திறம்பட ஆற் றும் பொருட்டு, பிற்போக்கு அரசியல் திட்டத்தை ஏற்றுக் கொண்ட சிலோன் தேசிய காங் கிரஸிலிருந்து விலகி, சகல தேசிய இனங்களையும் ஏகாதிபத்திய எதிர்ப்பு ஐக்கிய முன்னணியில் ஒன்று திரட்டி வருகிறது, சிலோன் கம்யூனிஸ்டுக் கட்சி.

*

### பூனைக்குப் பால் வேண்டுமா?

கப்பற்படை இலாக்காதார், பொக்கிஷ இலாக்காநாருக்கு அனுப் பிய செலவு ஜாபிதாவில், ஒரு செலவு இனம் குறிப்பிட்டிருந்தார்கள்: "கப்பற்படைக் காரியாலயத்தில் உள்ள பூனைக்குத் தினந்தோறும் பால் வார்க்க, வாரம் ஒன்றுக்கு ஆறு பென்ஸ் செலவு" என்று அவர்கள் குறித்திருந்தார்கள்.

இந்தச் செலவை, பொக்கிஷ இலாக்காதார் ஒப்புக்கொள்ள மறுத்து விட்டார்கள். அவர்கள் சொன்ன காரணமாவது: "எலிகள் இருந்தால் தான் உங்களுக்குப் பூனை வேண்டும். எலிகள் இருந்தால், பூனைக்குப் பால் தேவையில்லை; பூனை தன் ஆகாரத்தைத் தானே தேடிக் கொள்ளும்."

—ஜி. எம். யங்.

### சோதிடம் உண்மையா?

இந்த அகிலப் பிரபஞ்சமும் எதற்காகப் படைக்கப் பட்டிருக்கிறது என்று நமக்குத் தெரியாது. வான அண்டங்களெல்லாம் நிலை பிறழாது தங்கள் பாதைகளிலே சுழல்வது ஏன் என்றும் நமக்குத் தெரியாது. ஆனால், ஒன்று மாத்திரம் நிச்சயம். வில்லி என்ற யாரோ ஒரு நூசி போன்ற மனிதன், நமது பூமியில் ஏதோ ஒரு வீட்டில், ஏதோ ஒரு நேரத் தில் பிறக்கிறான். நமது பூமியோ, அந்த நட்சத்திரங்கள் இயங்கும் இடங் களிலிருந்து, பல கோடி மைல் தூரத்தில் இருக்கிறது. இந்தப் பூமியில் இப்படிப் பிறக்கும் இந்த அல்ப வில்லி, நீலக் கண்களும் சிவந்த நகங் களும் உடைய அழகிகளிடம் அணுகாமல் ஜாக்கிரதையா யிருக்கவேண் டும் என்ற தகவலை இவனுக்கு எச்சரிப்பதற்காகவே, அந்த வான அண்டங்களெல்லாம் அப்படி இயங்குகின்றன என்பதை மாத்திரம் நம்மால் நம்ப முடியாது.

—ஸி. இ. எம் ஜோட்.

# ராஜாக்களும் நவாப்புகளும்

அரசியல்வாதி

இந்தியா முழுவதையும் பிரிட்டன்தான் ஆளுகிறது என்று நினைப்பது தவறு. பிரிட்டிஷ் ஆளுகைக்கு உட்படாமல் 562 சமஸ்தானங்கள் இந்தியாவில் இருக்கின்றன. இந்தியாவின் பரப்பில் ஐந்தில் இரண்டு பாகம் சமஸ்தானங்களுக் குரியது. ஐந்தில் ஒன்றுக்கு மேற்பட்ட இந்திய மக்கள், சமஸ்தானப் பிரஜைகளாவார்கள். வெளிநாட்டு விவகாரம் தவிர மற்ற விஷயங்களைப் பொறுத்தவரையில், கொள்கையளவில் இந்தச் சமஸ்தானங்கள் தங்கள் சொந்த மன்னரின் ஆட்சிக்கு உட்பட்டு முழு உரிமையும் உடையன என்று சொல்லலாம். நடை முறையில் எவ்வளவு தூரம் இந்தச் சுதந்தரம் அமுலி லிருக்கிறது என்பது வேறு விஷயம்.

சமஸ்தானதிபதியை, அவர் இந்துவாயின் மகாராஜா என்றும், முஸ்லீமாயின் நவாப் என்றும் குறிப்பிடுவது வழக்கம். சில சமஸ்தானங்களில் விசேஷப் பெயர்களும் உண்டு. உதாரணமாக ஐதராபாத் சமஸ்தானதிபதி நைஜாம் என்று வழங்கப் படுகிறார். நவநகர் மன்னருக்கு ஜாம் சாகேப் என்பது சிறப்பு; ஸ்வாத் அதிபதியை வாலி என்று அழைக்கிறார்கள்.

இந்தியாவின் சுதந்தரத்துக்குக் குறுக்கே நிற்பவர்கள் பிரிட்டிஷார் மட்டுமல்ல; வகுப்பு வாதிகள் மட்டுமல்ல. சுதேச சமஸ்தானதிபதிகளுக்கும் அந்த முட்டுக் கட்டைக் கைங்கரியத்தில் ஒரு பங்கு உண்டு. ஏன்? அவர்களுடைய ஏதேச்சாதிகார ஆட்சிக்குப் பங்கம் வந்துவிடுமோ என்ற பயம்தான். இந்தக் கட்டுரை, அவர்களுடைய ஆட்சி ரகஸியங்கள் சிலவற்றை விளக்குகிறது.

சமஸ்தானங்கள் விஸ்தீரணத்தாலும், செல்வ நிலையாலும் பல வகைப்பட்டிருக்கின்றன. ஐதராபாத் சமஸ்தானம் போர்ச்சுகலை விட இரு மடங்கு ஜனத்தொகை உடையது; வருஷ வருமானம் எழுபது லட்சம் பவுன். கூர்ஜரத்தில் பில்பாரி என்றொரு சமஸ்தானம் இருக்கிறது. 1.65 சதுர மைல் விஸ்தீரணமும், 27 மக்களைக் கொண்ட ஜனத்தொகையும் உடைய இந்தத் தனியரசின் வருஷ வருமானம் 7 பவுனுக்கும் குறைந்தது. இவ்வாறு மிகப் பெரிய மன்னரும், மிகச் சிறிய மன்னரும் சமஸ்தானதிபதிகளாக இந்தியாவில் இருக்கிறார்கள். பிரிட்டிஷ் ஆளுகைக் குட்பட்ட பிரதேசங்களுக்குச் சமஸ்தானதிபதிகள் வருவார்களானால் மரியாதையின் அறிகுறியாக, அவர்களுடைய தகுதிக்கேற்றபடி பீரங்கி வெடிகள் போடுவார்கள். பெரிய மன்னர்களென்றால் அதிக வெடிகள்; சிறியவர்களாயின் குறைந்த அளவு.

இமயந் தொடங்கிக் குமரி முனை வரையும் சமஸ்தானங்கள் பரவி யிருக்கின்றன என்பது இந்தியாவின் படத்தைப் பார்த்தால் தெரியும். ருஷ்யாவின் தென் எல்லையை ஒட்டிய காஷ்மீர் சமஸ்தானம் வடகோடியி லிருக்கிறது; இந்தியாவின் தென்கோடியில் திருவாங்கூர் சமஸ்தானம் அமைந்துள்ளது. இவற்றினிடையே, ஐரிஷ் குடியரசினும் பெரிய மைசூர் சமஸ்தானம் உள்ளது. ஐதராபாத், போபால், இந்தூர், இருபத்து மூன்று

இராஜபுதன சமஸ்தானங்கள் ஆகிய மத்திய இந்தியப் பிரதேசம் முழுவதும் பிரிட்டிஷ் ஆளுகைக் குட்பட்டாதது. ஒன்றோடொன்று தொடர்ந்து பரந்துள்ளது.

இராஜபுதனத்துக்குத் தென் மேற்கில் கடற்கரையை ஒட்டி 286 சமஸ்தானங்கள் கத்தியவாரிலும், கூர்ஜரத்திலுமாகப் பரவிக் கிடக்கின்றன. இராஜபுதனத்தின் கீழ்த் திசையிலுள்ள குவாலியர், இமயத்தின் அடிவாரத்திலுள்ள சீக்கிய சமஸ்தானமாகிய பாட்டியாலா, மகாராஷ்டிரரின் கோலாப்பூர் ஆகிய சமஸ்தானங்கள் முன் கூறியவற்றோடு சேர்த்துக்கொள்ளத் தக்கன. பர்மாவின் அருகில், இந்தியாவின் கீழைத் திசையில், கூச் பீகார், திரிபுரி, மணிப்பூர் ஆகிய சமஸ்தானங்கள் உள்ளன.

மன்னர்களின் ஏகபோக உரிமைக்கு உட்பட்டே இந்திய சமஸ்தானங்கள் ஆளப்படுகின்றன என்பது கவனிக்கத் தக்கது. ஆட்சி வசதிக்காக நீதி, நிர்வாகம் இந்த இரண்டு இலாகாக்களையும் பிரிக்கும் சாதாரணப் பிரிவினை கூடப் பெரும்பாலான சமஸ்தானங்களில் கிடையாது. மிகச் சில சமஸ்தானங்களே சட்ட சபைகள் அமைத்துக்கொண்டுள்ளன; அந்தச் சட்ட சபைகளும் ஆலோசனைச் சபைகள் என்றே கூறத் தக்கவை. சமஸ்தானச் சட்ட சபை அங்கத்தினர்கள் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்டவர்களே யல்லாமல், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களல்ல. (மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினரே சட்ட சபை அமைக்கத் திருவாங்கூரில் சமீபத்தில் சட்டம் செய்திருக்கிறார்கள்.—ப. ர்., சக்தி) பிரிட்டிஷ் பிரதேசத்தில் சமாதான காலத்திலேனும் பத்திரிகைச் சுதந்தரம் கொஞ்சம் தாராளமாகவே காணமுடியும்; ஆனால், சமஸ்தானங்களிலுள்ள பத்திரிகைகளுக்குச் சுதந்தரம் என்பது அனேகமாய் இல்லை என்றே சொல்லலாம்.

சிறைப்பட்ட ஒருவரை உயர்தர நீதிமன்றத்தின்முன் ஆஜர் செய்யும்படியும், கைது செய்த காரணங்களைச் சொல்லும்படியும் கேட்கும் (ஹேபியஸ் கார்ப்பஸ்) உரிமை சமஸ்தானங்களில் கொஞ்சமும் கிடையாது. வெற்று ஆடம்பரங்களில் சுதேச மன்னர்கள் வீணுக்கும் செலவுகளோ அநியாயமானவை. சில சமஸ்தானாதிபதிகள் முழு வருவாயும் தமக்கே என்று கொண்டு, நகைகளுக்காகவும் அரண்மனைகளுக்காகவும், செலவு மிக்க பரிவாரங்களுக்காகவும் மக்களின் பணத்தைத் தண்ணீராய் வாரி இறைக்கிறார்கள்.

சமஸ்தானாதிபதிகள் என்னதான் செய்தாலும் பிரிட்டிஷ் சர்க்கார் தலையிடாமல் இடங் கொடுத்து வருகிறது என்பது பிரிட்டிஷ் ஆட்சிமீது சுமத்தப்படும் முக்கியக் குற்றச் சாட்டுகளில் ஒன்றாகும். சில சமயங்களில் சுதேச மன்னர்கள் நீக்கப்பட்டும், நாடு கடத்தப் பட்டும் இருக்கிறார்கள் என்பது உண்மைதான். (பிரிட்டிஷாரால்) பொறுக்க முடியாத அளவுக்குக் கொடிய செயல்கள் புரிந்துவிட்டார்கள் என்பதற்காக இத்தகைய காரியங்கள் செய்யப்பட்டனவேயன்றி, குறிப்பிட்ட சமஸ்தானாதிபதி தமது நாட்டை நேர்மையாக, நன்றாக ஆளவில்லை என்பதற்காகப் பிரிட்டிஷ் அரசாங்கம் தலையிடவில்லை. இந்திய சர்க்கார், சமஸ்தான விஷயங்

களைக் கவனிப்பதற்காக அரசியல் இலாக்கா ஒன்று ஏற்படுத்தியிருக்கிறது. வைஸ்ராயின் நேர் மேற்பார்வையில் இந்த இலாக்கா வேலை செய்கிறது. ஒவ்வொரு சமஸ்தானத்திலும் நடக்கும் காரியங்களைக் கூர்ந்து கவனித்து வருவதற்காக, வைஸ்ராய் தக்க அதிகாரங்களோடு கூடிய அதிகாரிகளை நியமிக்கிறார். இந்த அதிகாரிகள் சுதேச மன்னர்களைக் கட்டுப்படுத்தவோ, அவர்களுக்குரிய அதிகாரத்தில் தலையிடவோ முடியாது. ஆனால், இது கொள்கை யளவில்தான் சரி; நடைமுறையில் இந்த அதிகாரிகளின் ஆணைக் குட்பட்டவர்களே அரசர்கள் என்றுகூடச் சொல்லலாம். ஆனால், இந்திய சர்க்காரின் நலங்களைப் பாதித்தாலொழிய, இந்த அதிகாரிகள் சமஸ்தான ஆளுகையில் பொதுவாகத் தலையிடுவதில்லை.

1921-ல் மன்னர்கள் சபை ஒன்று ஏற்பட்டது. இந்த மன்னர் சபைக்குத் தலைமை வகிப்பவர் வைஸ்ராய்தான். இந்தச் சபைக்கு ஒரு சான்ஸலர் உண்டு; ஆண்டுக்கூட்டத்தின்போது என்னென்ன விஷயங்கள் விவாதிக்க வேண்டு மென்ற நிகழ்ச்சி முறை தயாரிப்பதுதான் இவருடைய வேலை.

சில சமஸ்தானங்களின் ஆட்சி முறை பிரிட்டிஷ் ஆளுகையின் கீழுள்ள இந்திய மாகாணங்களின் சர்க்காரை விடப் பல மடங்கு சிறந்ததா யுள்ளது. உதாரணமாக, மைசூர் சமஸ்தானத்தைக் குறிப்பிடலாம். காலஞ்சென்ற மன்னரின் ஆட்சியின்போது, கல்வி, பொது நலம், நீர்ப்பாசனம், தொழில் வளர்ச்சி முதலிய துறைகளில் மைசூர் பெரிதும் முன்னேற்ற மடைந்திருக்கிறது. இந்தியாவின் மற்றப் பகுதிகளைவிடத் திருவாங்கூரில்தான் அதிகம் பேர் படித்திருக்கிறார்கள். மேலும், உயர்தர இந்துக்களுக் கென்றே வரையறை செய்திருந்த ஆலயங்களைத் தீண்டாதாருக்கும் முதன் முதலில் திறந்து விட்ட பெருமை திருவாங்கூர் மன்னருக்கே உரியது. பல பிரிட்டிஷ் மாகாணங்களில்கூடக் காண முடியாத கட்டாய இலவச அடிப்படைக் கல்வியைப் பரோடா மன்னர்தான் முதன் முதலில் தம் சமஸ்தானத்தில் நடைமுறைக்குக் கொண்டுவந்தார். உலகத்திலேயே மிகச் சிறந்த நூல்நிலையங்களுள் ஒன்றைப் பெற்றுள்ள பரோடா பெருமைப் பட்டுக் கொள்ள இடமுண்டு.

சில சமஸ்தானங்களின் சிறந்த முன்னேற்றங்களுக்கு அவற்றின் திவான்கள் பொறுப்பாயிருந்தார்கள் என்று சொன்னால், அது சமஸ்தானங்களின் மன்னர்களைக் குறை கூறுவ தாகாது. ஸர். மிர்ஸா இஸ்மாயில், (ஸர். சி. பி.) போன்ற சிறந்த நிர்வாகத் திறமை வாய்ந்த மக்களைத் திவான்களாக நியமித்த பெருமை அந்தச் சமஸ்தானதிபதிகளைத் தான் சாரும்.

பிரிட்டிஷ் மாகாணங்களில் சுய ஆட்சி வேட்கையால் உண்டான கிளர்ச்சியின் வேகம் ஏற்கெனவே சுதேச சமஸ்தானங்களிலும் பரவ ஆரம்பித்து விட்டது. சமஸ்தானங்களின் ஆட்சியாளர் எவ்வளவுதான் விழிப்புடன் இருந்தும், பிரிட்டிஷ் பிரதேசத்திலுள்ள சுதந்தரக் கிளர்ச்சியை ஒத்த இயக்கங்கள் பல சமஸ்தானங்களில் தோன்றி விட்டன. இந்த இயக்கங்கள், சீர்திருத்தங்கள்

செய்ய வேண்டு மென்றும் சமஸ்தான அரசாங்கத்தில் மக்களுக்கு நெருங்கிய தொடர்பு ஏற்படுத்த வேண்டு மென்றும் வற்புறுத்து கின்றன. கடந்த சில ஆண்டு களில் சில மன்னர்கள் இந்தக் கிளர்ச்சிகளுக்கு இடங் கொடுக்கத் தொடங்கினர்கள். மக்கள் வற்புறுத்தலின் வன்மையும், மக்கள் திருப்தியே தங்கள் நல்வாழ்வுக்குக் காரணமென்று மன்னர்கள் உணர்வதுமே இத்தகைய மனப்பான்மை விளையக் காரணங்களாகும். மன்னர் கடமை எது என்று நோக்கினலும், சுய நலத்துக்குப் பாது காவலாக என்ன செய்ய வேண்டு மென்று நோக்கினலும் பிரிட்டிஷ் இந்தியாவில் சுதந்தரக் கிளர்ச்சி செய்துவரும் ஏனைய இந்திய மக்களோடு சுதேச மன்னர்கள் சமாதான முறையில் பழகிக் கொள்ள வேண்டு மென்று, காஷ்மீர மகாராஜாவும், இந்தூர் ஹோல்காரும் விளம்பரப் படுத்திய செய்தி இந்தக் கட்டத்தில் குறிப்பிடத் தக்கதாகும். நாளைய இந்திய சர்க்கார் இன்றையக் கிளர்ச்சியாளர் கையில் தானிருக்கும் என்று அவர்கள் உணர்ந்ததே இந்தப் பிரகடனத் துக்குக் காரணம்.



## உயர்தர கணிதம்

வடக்கே உள்ள ஒரு மளிகைக் கிடங்கின் மேஸ்திரிக்கு ஓர் உத்தரவு போயிற்று. "இனிமேல் மாதாந்தர அறிக்கையில், சகல புள்ளி விவரங்களையும் சதவிகிதக் கணக்காகவே கணக்கிட்டு அனுப்ப வேண்டும்" என்பது உத்தரவு.

அந்தக் கிடங்கில் நூறு ஆண்களும், இரண்டே இரண்டு அழகான இளம் பெண்களும் வேலைசெய்து வந்தார்கள்.

மேஸ்திரி அடுத்த மாதம் எழுதியனுப்பிய அறிக்கையில், பின்வருமாறு குறிப்பிட்டிருந்தான்: "எஜமான் அவர்களே! நமது கிடங்கில் சென்ற வாரம் ஒரு முக்கியமான அபிவிருத்தி நிகழ்ந்திருப்பதை, வணக்கமாய்த் தெரிவித்துக் கொள்ளுகிறேன். நமது கிடங்கில் வேலைசெய்யும் மனிதர்களில் இரண்டு சதவிகிதம் பேர், பெண்களில் நூறு சதவிகிதம் பேரை மணம் புரிந்து கொண்டுவிட்டார்கள்."

—கிரிஸ்டியன் ஸயின்ஸ் மானிட்டர்.

## ருஷ்யாவில் மதச் சுதந்தரம்

ஸோவியத் யூனியனில் மதங்களின் நிலைமையை, நான் ஆராய்ந்தேன். வைதிக ருஷ்ய சர்ச், அர்மீனியன் சர்ச், ஜியார்ஜியா சர்ச், பாப்டிஸ்டுகள் தலைமைக் காரியாலயம், யூத சமயத் தலைமைக் காரியாலயம், முஸ்லிம் சமயத் தலைமைக் காரியாலயம் ஆகிய ஸ்தாபனங்களையெல்லாம் நான் போய்ப்பார்த்தேன். இந்தச் சகல சமய ஸ்தாபனங்களும் ராஜாங்கத்துடன் மிக்க ஒற்றுமையாய் வேலை செய்கின்றன; ராஜாங்கம் செய்யும் உதவிக்கு நன்றியும் செலுத்துகின்றன. ஸ்டாலின் நேரே என்னிடம் சொல்லிய வார்த்தைகள் இவை: "ராஜாங்கம் எவ்வளவு தேசபக்தியுடையதா யிருக்கிறது என்பதை, சர்ச் கண்டு கொண்டது; சர்ச் எவ்வளவு தேசபக்தியுடையதா யிருக்கிறது என்பதை, ராஜாங்கம் கண்டு கொண்டது."

—காண்டர்பரி டீன், (லேபர் மன்த்லி.)

# நானும் உலகமும்

தி. ஜ. ர.

'நான் யார்?'

இந்த மகத்தான பிரச்னையை ஒரு நாள் ஒரு நண்பர் எங்களிடம் கிளப்பி விட்டார். நாங்கள் அவரிடம் ஒரு பத்திரிகைக்குக் கட்டுரை கேட்டது தான் எங்கள் குற்றம். அவருடைய கட்டுரை இந்த 'நான் யார்' என்ற பிரச்னையை ஒரு கலக்குக் கலக்கி, எங்களையும் கலங்கச் செய்துவிட்டது.

அவர் கொஞ்சம் பிரபலமான மனிதர். பிரபலஸ்தர்களுடைய பெயர்களின் சக்தியில் எனக்குக் கொஞ்சம் நம்பிக்கை யுண்டு. ஆகையால், 'நான் யார்?' என்ற அவருடைய கட்டுரையைப் பத்திரிகையில் போட, நான் சம்மதித்தேன். ஆனால், அவர் தம்முடைய பெயரை அதற்கு அளிக்கச் சம்மதிக்க வில்லை. 'நான் யார்?' என்ற கேள்வியையே தலைப்பாய்க் கொண்ட தமது கட்டுரையில், தாமே அநாமதேயமாகி விடுவதுதான் பொருத்தம் என்று அவர் கருதி விட்டார் போலிருக்கிறது.

'நேதி; நேதி' (இது வல்ல, இது வல்ல) என்று உபநிஷத வாக்கியம் ஒன்று சொல்லுவார்கள் அல்லவா? அதுதான் கட்டுரையின் அடக்கப் பொருள். 'நான் யார்? நான் கை யல்ல; நான் கா தல்ல; நான் மூக் கல்ல; நான் நாக் கல்ல; நான் நக மல்ல; நான் ரோம மல்ல...' என்று என்னென்னவோ எழுதி யிருந்தார்.

கட்டுரையைக் கொடுத்து விட்டு, "எப்படி?" என்றார்.

என்னத்தைச் சொல்வது? நான் ஒன்றும் தோன்றாமல், தயங்கி உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

இந்தச் சமயம் 'சுறீர்' என்று அவரை ஒரு முகட்டுப் பூச்சி கடித்து விட்டது. கையைப் படக்கென்று இழுத்து ஆட்டி, "என்ன இழவு மூட்டுப் பூச்சி! என்னமாய்க் கடிக்கிறது!" என்று பிரலாபித்தார் நண்பர்.

"யாரை?"

"யாரையா? என்னைத்தான், ஐயா! உங்களைக் கடிச்சா எனக்கெப்படித் தெரியும்? என்னைத் தான் கையிலே கடிச்சுடுத்து."

"கையிலே தானே? அது தான் நீங்கள் இல்லையே."

நண்பர் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார். நண்பர் பரப் பிரம்மமா யிருக்கலாம். என்றாலும், அந்தப் பரப்பிரம்ம சொரூபத்தை நான் காண முடியவில்லை. முகட்டுப் பூச்சிக் கடிக்குக் கூசும் கையையும், பெருமூச்சு விடும் மூக்கையும், பெருமை பேசும் நாக்கையும்தான், நான் பார்க்க முடிந்தது.

உனது 'நான்' என்ற உணர்ச்சியை அழித்துவிடு என்று மதம் சொல்கிறது; தேசம் சொல்கிறது; உலகமே சொல்கிறது. சொல்வது மாத்திரமல்ல: உனது அந்த உணர்ச்சியை அழிக்க, தங்களாலான முயற்சிகளை யெல்லாம் புரிகின்றன. இத்தனைக்கும் தப்பி அந்த உணர்ச்சி இருந்து கொண்டே தான் இருக்கிறது. இந்நிலையில், உலகம் உய்யும் உபாயம் என்ன?

நண்பரின் கட்டுரையைப் படித்த எனக்கு, நான் யார் என்பது தெளிவுபட வில்லை. ஆனால், உலக ஜனங்கள் சகலரையுமே நோக்கி, 'நீங்கள் யார்?' என்று கேட்கும் ஒரு புதிய பிரச்னைதான் எழுந்தது. நான் யார் என்பதைப் பற்றி எனக்குக் கவலையே இல்லை. அதைப் பற்றிய கவலை உலகத்தைச் சேர்ந்தது. முழு உலகத்தையும் ஒரு தராசின் ஒரு தட்டில் வைத்து மறு தட்டில் என்னை வைத்துத் தான், நான் என்னை ஒவ்வொரு நிமிஷமும் நிறுத்துக் கொள்ளுகிறேன். ஒரு சிறு தியாகத்துக்குக்கூட நான் தயாரில்லை. என் பொருட்டு, இந்த உலகமே தியாகமாக வேண்டி வந்தாலும், எனக்குச் சம்மதமாகவே யிருக்கும். எனக்கு என்னைவிட வேறு எது உண்மை?

நான் அறியக்கூடிய உண்மைகளுக்கு நானே உறைகல். எனக்கு என் ஜனனம் இந்த உலகத்தின் பிறப்பு; என் மரணம் உலகத்தின் சாவு. யார் எத்தனை வேதாந்தங்கள் பேசினாலென்ன? யார் என்ன உபதேசங்கள் செய்தாலென்ன? அதெல்லாம், உலகத்தின் தன்னலத்துக்கும் என் சுயநலத்துக்கும் இடையே காணப்பட்ட ஒரு ராஜியே யாகும். அந்த ராஜியில், சில சமயம் என்னைப் பலிகொள்ளப் பார்க்கிறது உலகம். நானும் சில சமயம் சந்தோஷமாய் அந்த வலையில் அகப்பட்டுக் கொண்டு விடுகிறேன். உடனே, உலகம் என்னை 'வீரன், தீரன்' என்றெல்லாம் புகழ்ந்து இச்சகம் பேசுகிறது.

'என்ன அகங்காரம் இவனுக்கு?' என்று அதிசயிக்கிறீர்கள் அல்லவா? எனக் கல்ல; உண்மையில் இந்த அகங்காரம் இல்லாத புருஷர்களே ரொம்பவும் அபூர்வம். தம்மை மறந்து வாழும் மனிதர்களைக் காண்பது துர்லபமா யிருக்கிறது. அப்படியே மறந்து வாழ்பவனுங் கூட, உலகத்தைத் தனது ஒரு மூலையிலிருந்துதான் பார்க்கிறான். அவனவனுடைய அனுபவம், அவனவனுடைய சக்தி, அவனவனுடைய வசதிகளுக் கேற்றவாறே, அவனவனும் உலக விஷயங்களைத் தீர்மானிக்க முடிகிறது.

ராயர் அப்பாஜி கதைகளில் ஒரு நாவிதனைப் பற்றிய கதை ஒன்று உண்டு. ராஜா ஒரு நாள் அந்த நாவிதனிடம் க்ஷவரம் செய்து கொண்டார். "அப்பா, நம் குடிபடைக ளெல்லாம் க்ஷேமமா யிருக்கிறார்களா? செல்வச் செழிப்போ டிருக்கிறார்களா?" என்று கேட்டார் ராஜா. "ஆஹா! ஜனங்களுக்கு ஒரு குறையும் கிடையாது. எலுமிச்சங்காயளவு தங்கம் இல்லாதவனே, நாட்டில் யாரும் கிடையாது" என்றான் நாவிதன். ராஜா இதை அப்பாஜியிடம் சொன்னார். உண்மை என்ன என்றால், அந்த நாவிதன் ஓர் எலுமிச்சங்காயளவு தங்கம் சேர்த்து வைத்திருந்தான். அதனால்தான், உலகத்திலுள்ள அத்தனை பேரிடமுமே அவ்வளவு தங்கம் இருப்பதாகச் சொல்லி விட்டான். ராயர் அப்பாஜி இதை ஊகித்தறிந்து கொண்டார். ரகஸ்யமாக ஆள் வைத்து, அந்தத் தங்கத்தைத் திருடி வரச் செய்து விட்டார். அடுத்த முறை ராஜா க்ஷவரம் செய்து கொள்ளும்போது முன்போலவே கேட்டதற்கு, நாவிதன் என்ன பதில் சொன்னான் தெரியுமோ? "அதை ஏன் கேக்கிறீங்க? ஊரிலே திருட்டும் புரட்டும்

மலிஞ்சு போச்சுங்க. கடுகு தங்கம் வெச்சிருக்கற மனுசனே கெடையாதுங்க. காலமே கெட்டுப் போச்சுங்க" என்ருன் நாவிதன்!

இந்த நாவிதனைப் போல்தான் நாம் அனைவருமே பெரும்பாலும் உலகத்தை அளந்து வருகிரேம். சீர்திருத்தக்காரனுக்கு வைதீகனின் பார்வை தெரியாது. வைதிகனுக்குச் சீர்திருத்தக்காரனின் நோக்கம் தெரியவில்லை. முதலாளியும் தொழிலாளியும் எதிரும் புதிருமாய் நிற்கிருர்கள். அடிமை நாட்டவரும் சாம்ராஜ்யவாதிகளும் குறுக்கே பாய்கிருர்கள். ஒருவருடைய பார்வையும் போக்கும் கஷ்ட நஷ்டங்களும் சுகதுக்கங்களும் மற்றவருக்குப் புரிய வில்லை. தங்கள் தங்கள் பக்கத்திலேதான் முழு நீதியும் தர்மமும் இருப்பதாக, ஒவ்வொருவரும் மனேபாவம் செய்து கொண்டு உறுதியாக நம்புகிருர்கள். தத்தம் கட்சியில் அறியாமையின் கலப்பு, கடுகளவும் இல்லையென்றுதான் ஒவ்வொருவரும் நிச்சயமா யிருக்கிருர்கள். வர்ணம் பூசிய கண்ணுடியின் மூலமாய்த்தான், நாம் ஒவ்வொருவருமே உலகத்தைப் பார்க்கிரேம்.

இந்த நிலைமையில், உள்ள பரிகாரம் என்ன? அன்பு, பணிவு, அனுதாபம், தியாகம் ஆகியவைகளைக் கொண்டுதான் பற்பல பிரச்னைகளையும் சமாளிக்க முடியும். அதுதான் காந்தி காட்டும் வழி; வாழையடி வாழையாய் மகான்கள் அனைவரும் காட்டும் வழி.

*

## காந்தியும் பிரிட்டிஷ் மன்னரும்

இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டின்போது, காந்திஜி பிரிட்டிஷ் மன்னரைச் சந்திக்கப் போகையில், ராஜாங்க ஆடம்பரங்களைச் சட்டை செய்யவில்லை. புதிதாய் வெளுத்த போர்வைகூடத் தேடவில்லை. பழைய போர்வையையே, உள்புறம் வெளிப்புறமாகும்படி திருப்பிப் போர்த்துக் போர்த்துக் கொண்டு, பக்கிங்ஹாம் அரண்மனைக்குள் பிரவேசித்து விட்டார்.

"உங்களை முதலில் தென்னுப்பிரிக்காவில் சந்தித்தேனே, அப்போது நீங்கள் நல்ல மனிதரா யிருந்தீர்கள். 1918-ஆம் ஆண்டு வரையில் நீங்கள் நல்ல மனிதராகவே யிருந்தீர்கள். அப்புறம் என்னவோ மாறிவிட்டீர்கள்" என்றுர் மன்னர்.

காந்திஜி கம்பீரமாய் மௌனம் சாதித்தார்.

"ஏன் என் மகனைப் பகிஷ்காரம் செய்தீர்கள்?" என்று கேட்டார் மன்னர்.

"மகாராஜா, தங்கள் மகனை அல்ல. பிரிட்டிஷ் மகுடத்தின் உத்தியோக ரீதியான பிரதிநிதியையே பகிஷ்கரித்தேன்" என்றுர் காந்திஜி.

"ராஜாங்கத்தைக் கவிழ்க்க முயலும் கலகக்காரர்களை, நாம் சகித்துக்கொள்ள மாட்டோம். அதை அடக்கியே தீருவோம். நமது ராஜாங்கம் நடந்துகொண்டே யிருக்கும்" என்றுர் மன்னர்.

இவை மன்னரின் வார்த்தைகளே யானுலும், ஆட்சேபம் செய்யாமல் விட, காந்திஜிக்கு இஷ்டமில்லை: "மகாராஜா, இந்த விஷயத்தை நான் தங்களோடு வாதிக்கவேண்டுமென்று சொல்லுகிறீர்கள்?" என்றுர்.

— பியாரிலால், (இந்தியன் எக்ஸ்பிரஸ்)

# ஆசிரியர் ? ஆசிரியர் ? ?

'குரு'

நீங்கள் எழுதிய நாவல் இன்று தான் வெளி வருகிறதோ! ஆபீசுக்குப் போகிற ஜோரைப் பார்த்தாலே தெரிகிறதே. ஆண் குழந்தையைச் சௌக்கியமாகப் பெற்றெடுத்த பெண்மணியின் மகிழ்ச்சி உங்கள் முகத்தில் தாண்டவ மாடுகிறது. "நான் எழுதிய புத்தகத்தை இன்று எல்லோரும் படிப்பார்க ளென்ருல், சந்தோஷப்படாமல் இருக்க முடியுமா?'' என்று கேட்கலாம். உண்மைதான்.

சரி, ஆபீசுக்குப் போகிறீர்கள். மத்தியானம் சிற்றுண்டி உண்ணப் போவதற்குமுன், பல நண்பர்கள் வந்து தங்கள் சந்தோஷத்தையும், பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்கிருர்கள். ஏதாவது அன்பளிப்புப் பிரதி கிடைக்காதா என்ற எண்ணந் தான், வேறென்ன!

ஒரு பெரிய மனிதர் உங்களைப் பார்க்க வருகிருர். திவான் பகதூர் ஒருவர்-தாசில்தாராய் இருந்தவர்-கேவலம் ஒரு கிளார்க்கைத் தேடி வருவதென்ருல், சாமானியமா? மேலும், அந்தப் பெரிய மனிதர் உங்கள் கம்பெனியின் பங்காளி ஒருவருக்கு மிகவும் வேண்டியவ ரென்ருல், கேட்க வேண்டுமா?

"என்ன ஸார், என்னமோ நாவல் எழுதியிருக்கிறீர்களாமே? என்ன பேர்.....? என்னவோ சொன்னுர்களே......பேர் தான் ஏதோ ஒரு மாதிரியா யிருக்கிறது......இருந்தாலும் பரவாயில்லை......என் ஸார், அது என்ன துப்பறியும் நாவலோ?......'' என்று கேள்விமேல் கேள்வியாகக் கேட்டுக் கொண்டே போகிருர். நீங்கள் ஏதாவது பதில் சொல்ல வேண்டுமென்று அவர் எதிர்பார்ப்ப தாகவே தெரியவில்லை. கடைசியாக ஒரு கேள்வி கேட்கிருர்: "உங்கள் கதா பாத்திரங்களின் பெயர்களைச் சொல்லுங்கள், பார்க்கலாம்'' என்கிருர்.

இதற்கு என்ன பதில் சொல்வீர்கள்? பாத்திரங்களின் பெயரைக் கொண்டே கதைப் போக்கு, எழுத்துத் திறமை, கதையின் சுவை எல்லாவற்றையும் முடிவுசெய்து விட நினைக்கிருர் அவர். "இந்த மாதிரி அசட்டுப் பிறவிகளுக்குத்தான் இன்றைய சமூகத்தில் உயர்ந்த நிலை இருக்கிறது. நாம் நாலைந்து நாவல்கள் எழுதியுங் கூட - நம் அறிவை யெல்லாம் விளம்பரப் படுத்தியும் கூட - அந்தக் கிளார்க்கு வேலைதான் நம் தலையெழுத்தாக இருக்கிறது'' என்றெல்லாம் நினைக்கிறீர்கள். என்னத்தை நினைத்து என்ன பண்ண? அந்தப் பெரிய மனிதர் இப்போது கேட்கிருர்; பதில் சொல்ல வேண்டும்.

---

ஆசிரியன் என்ருல், அவன் ஏதோ அதிமனிதப் பிறப்பு என்று நினைப்போர் இருக்கிருர்கள். ஆனுல், பல கதாசிரியர்கள் 'படும்பாடு பஞ்சுதான் படுமோ!' என்றே சொல்லவேண்டி யிருக்கிறது. 'ஆசிரியர்! ஆசிரியர்!' என்ற மிக்க ரசமான ஒரு புத்தகத்தில், டொனுல்டு பிரிட்ஜ் வாட்டர் என்பவர் இதைப் பற்றி விவரித்திருக்கிருர், அதில் ஒருபகுதியை அனுசரித்தது இந்தக் கட்டுரை.

நல்ல வேளை......உங்களிடம் பதில் எதிர் பார்க்காமலே அவரே வழக்கம்போல் பேசிக் கொண்டு போகிறார். உங்களை மறந்து விட்டார்; நீங்கள் எழுதிய புத்தகத்தை மறந்து விட்டார். "ஆ. கா. எழுதிய நாவல்களைப் படித்திருக்கிறீர்களா, ஸார்......? அடடா, என்ன திறமை......! அவரோடு அடிக்கடி உலாவப் போவேன்...... "மாளப் பிறந்த மன்னவன்" எழுதினார்; எத்தனையோ பதிப்புகள் வெளியிட்டார்......அதிஷ்ட தேவதை அப்புறம் அவர் வீட்டுக்கே குடி வந்து விட்டது" என்று அவர்பாட்டில் பேசிக் கொண்டேயிருக்கிறார். ஆ. கா வந்து உங்களை இருந்த இடந் தெரியாமல் ஆக்கிவிட்டார். ஆ. கா. விடம் குடிபுகுந்த அதிர்ஷ்டம் உங்களிடம் தலையைக்கூடக் காட்டவில்லை. காட்டியிருந்தால் நீங்கள் ஏன் இவரிடம் இந்தப் பாடு படப் போகிறீர்கள்? எவ்வளவுதான் பொறுத்துப் பார்க்க முடியும்?

நம்மைப் பற்றியும் பெரியவருக்கு நினைவூட்டலாமென்று நினைத்து "ஸார், நான் எழுதியது கூட ஒரு துப்பறியும் நாவல் தான்" என்று வெகு சிரமப்பட்டுச் சொல்லி விடுகிறீர்கள். அவர் இந்த உலகத்துக்கு வந்து விட்டார்!

"துப்பறியும் நாவலா! ஆ, எனக்கு மிகவும் பிடிக்குமே! போ. கி., சா. கு....இவர்களெல்லாம் துப்பறியும் நாவல்களுக்குப் பேர்போனவர்கள், ஸார். துப்பறியும் நாவல் எல்லாம் நான் படித்திருக்கிறேன், ஸார். ஒரு நாவலில் கதாநாயகனின் வீரத்தைப்பற்றி வர்ணிக்கிறார், பாருங்கள். அது மாதிரி இன்னொருவரால் எழுதவே முடியாது. ஒரு பெரிய மலை. அதிலிருந்து ஒரு கெடு பள்ளத்திலே..." என்று அந்தக் கதாநாயகனின் வீரப்பிரதாபங்களைச் சொல்லி உங்கள் காதைச் செவிடாக்குகிறார்.

மனத்துக்குள்ளே என்ன நினைக்கிறீர்கள்! "திடுக்கிடும் சம்பவங்கள் 'நிறைந்த' பாட்டி கதைகளைத் துப்பறியும் நாவல் என்று பேசும் இந்த ஆசாமியிடம் என்ன சொல்ல..." என்றெல்லாம் தோன்றுகிறதா? என்ன செய்வது?

நல்ல வேளை, ஆபீஸ் பையன் உங்களுக்கு விடுதலை கொண்டு வந்து விடுகிறான். யாரோ, போனில் உங்களைக் கூப்பிடுகிறார்களாம்.

"யாரது?......ஓகோ, நீயா! அப்படி என்னடா அவசரம்? என்ன சமாசாரம்?"

உங்கள் தம்பியா அது? ஆமாம், அவன்தான்.

"ஆ-அப்படியா? புத்தகம் அவருக்கு மிகவும் பிடித்திருக்கிறதோ! ஒரு புத்தகம் விலை கொடுத்தே வாங்கினாரா? சபாஷ்! நீ கெட்டிக்காரன் தானடா."

காகிதம் வாங்கப் பட்டபாடு! அச்சுக்கூடச் சொந்தக்காரனைத் தாஜாப் பண்ணி அச்சிடப் பட்டபாடு...! கடைசியாக எல்லா இடைஞ்சல்களையும் கடந்து புத்தகம் வெளிவந்தே விட்டது. ஒரு புத்தகம் விற்றும் விட்டது என்றால், உங்களுக்குச் சந்தோஷம் வரத்தானே செய்யும்...! நாவலை எழுதக்கூட எழுதி விடலாம்; அதை வெளியிட்டு விலையாக்குவதென்றால், அதென்ன அவ்வளவு எளிய

காரியமா?...என், ஸார், முகம் அப்படிப் போகிறது...?

"என்னடா சொல்லுகிறாய்...? அண்ணி...அண்ணி என்ன செய்தாள்......புத்தகந்தான் விற்றுவிற்றே யென்று புடைவை வாங்கினளா...சரிதான்..."

"நீ வேறு சுதந்தரம் கொண்டாட ஆரம்பித்து விட்டாயா? நாலைந்து புத்தகம் இனமாகக் கொடுப்பதென்றால், லேசென்று நினைத்தாயா? என்னைக் கேட்டாவது செய்தாயா..."

சரி, ஏன் இவ்வளவு கஷ்டப்படுகிறீர்கள்? இனி வருந்துவதால் என்ன பயன்? உங்கள் மனைவி புடைவை வாங்கி விட்டாள். உங்கள் தம்பி அன்பளிப்பாகப் புத்தகங்களைப் பறிகொடுத்து விட்டான்... புத்தகம் விற்க ஆரம்பித்து விட்டதென்ற மகிழ்ச்சியிலேயே, அவர்கள் அப்படி யெல்லாம் செய்து விட்டார்கள். விடுங்கள், ஸார்; உலகமே அப்படித்தான்.

"அந்தக் கடையில் போய் இன்ன புத்தகம் இருக்கிறதா என்று கேட்கப் போகிறாயா? அதுதான், என் புத்தகத்தைத்தான்; கேட்பது சரிதான். ஆனால், ஜாக்கிரதையாகக் கேள். ஒரு வேளை, நம் புத்தகம் அங்கே தப்பித் தவறி இருந்து விட்டால், காசு கொடுத்து வாங்க முடியாது. எக்கச்செக்கமாய் அகப்பட்டுக் கொள்ளாதே. சரி, சாயங்காலம் எல்லாம் பார்த்துக் கொள்ளலாம்."

போனை வைத்து விட்டு உங்கள் நாற்காலியில் வந்து உட்காருகிறீர்கள். ஒரு வேலையும் செய்ய முடியவில்லை.

பத்திரிகை மதிப்புரையாவது நன்றாக வராதா என்றுதான் உங்கள் நினைவெல்லாம் ஓடுகிறது. செய்த செலவுக்காவது கட்டிவர வேண்டுமே என்ற கவலை பற்றுகிறது.

இந்த நிலையில் பத்திரிகை மதிப்புரை ஒன்றுதான் உங்களுக்கு ஆறுதல் தரக்கூடியது.

"இந்த அருமையான புத்தகத்தைப் பற்றித்தான் எல்லோரும் பேசப் போகிறார்கள்" என்றோ, "அப்பாடா, கடைசியாக, வாழ்க்கையை அப்படியே அப்பட்டமாக ஓவியம் தீட்டிவிட்ட நாவல் ஒன்று வந்து விட்டது" என்றோ, "இந்தப் புத்தகத்தைச் சர்க்கார் ஏன் தடை செய்யக் கூடாது? படிக்க எடுத்து விட்டால் மற்ற வேலைகளை யெல்லாம் மறந்து இதையே படித்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்" என்றோ மதிப்புரைகள் வருமானால், உங்கள் கவலை தீர்ந்து விடுமென்று நினைக்கிறீர்கள். மதிப்புரை அப்படி வருவதுகூட ஒன்றும் பிரமாதமல்ல. ஆனால், உங்கள் கவலை இருக்கிறதே, அது தீர்வது மட்டமட்டில் பிரம்மாண்டமான ஒரு கேள்விக் குறிதான்.



மாமியார் பெருமை

அமெரிக்க மேல்க் கடற்கரைப் பெண்ணொருத்தி விவாகரத்துக் கோருகிறாள். அவள் சொல்லும் காரணம்: "என் அம்மா வரும்போதெல்லாம் என் புருஷன் காதிலே கார்க்கை அடைத்துக்கொண்டு விடுகிறார். இதை என்னால் சகிக்க முடியவில்லை."

—பரேட்.

# ஹிந்துக்கள் எப்படி ?

அபு-அல்-பஸல்

சுருக்கமாகச் சொன்னுல், ஹிந்துக்கள் தெய்வபக்தி நிறைந்தவர்கள்; சரளமான சுபாவம் படைத்தவர்கள்; அந்நியரிடம் மரியாதை செலுத்துவார்கள்; எப்போதும் சிரித்த முகத்தோடிருப்பார்கள்; அறிவுத் தாகம் கொண்டவர்கள்; கடுமையான நியம நிஷ்டைகளை அநுஷ்டிப்பார்கள்; நீதியாய் நடப்பதில் ஆர்வம் நிறைந்தவர்கள்; ஒதுங்கி வாழும் இயல்புடையவர்கள்; தொழிலில் திறமையுடையவர்கள்; நன்றி மறக்காதவர்கள்; சத்தியம் தவருதவர்கள்; தங்கள் வியாபாரங்கள் அனைத்திலும் அளவிறந்த நாணயம் உடையவர்கள்.

அவர்களுக்குத் துன்பம் வரும்போதுதான், அவர்களுடைய சற்குணம் பிரகாசமாய் ஜொலிக்கும். யுத்த களத்திலிருந்து புறமுதுகு காட்டி ஓடுவதென்பதே, ஹிந்துப் போர் வீரர்களுக்குத் தெரியாது. ஆனல், வெற்றி சந்தேகம் என்ற நிலைமை ஏற்படும்போது, தங்கள் குதிரைமீதிருந்து இறங்கி, வீரத்தின் பரிசாகத் தங்கள் உயிரையே துறந்து விடுவார்கள். பெரும்பாலும், தங்கள் குதிரையின் குதிகால் நரம்பை அறுத்து அதை முடமாக்கி விடுவார்கள். எதற்காக என்ருல், தாங்கள் ஓடிப்போக வசதியில்லாமல் செய்துகொள்ளத்தான். இவ்விதம் தாங்கள் நிர்க்கதியாய்ப் போனபின், யுத்தத்திலே வெகு சீக்கிரமாய் இரண்டிலொன்று பார்த்து விடுவார்கள்.

தங்கள் உபாத்தியாயர்களிடம் அவர்களுக்கு மிகுந்த பக்தி. தங்கள் வாழ்க்கையைத் தெய்வத் தொண்டிலே ஈடுபடுத்த முடியுமானுல், சுகபோகங்களை அவர்கள் லட்சியம் செய்யமாட்டார்கள்.

ஹிந்துக்கள் அனைவருமே ஒரே பரம்பொருளில் நம்பிக்கை கொண்டவர்கள். அவர்கள் பற்பல விக்கிரகங்களையும் மிக்க மதிப்போடு தொழுகிருர்கள். என்ருலும், ஹிந்துக்கள் கேவலம் விக்கிரகமே தெய்வமென நம்பும் அஞ்ஞானிகள் அல்ல. அறியாதவர்கள்தான் அவர்களைப்பற்றி இப்படி நினைப்பார்கள். நேர்மையும் கல்வி யறிவும் நிறைந்த பல ஹிந்துக்களுடன், இந்த விஷயத்தைப்பற்றி நானே எத்தனையோ தடவை விவாதித் திருக்கிறேன். அதிலிருந்து, அவர்களுடைய கொள்கையை நான் அறிந்து கொண்டிருக்கிறேன். அது இதுதான்: விக்கிரகங்க ளெல்லாம், பற்பல தேவர்களின் சின்னங்களேயாகும்; அந்தத் தேவர்களை அவர்கள் பிரார்த்திக்கிருர்கள்; எதற்காக என்ருல், தங்கள் சிந்தையைப் பல விஷயங்களில் திரி

சமீப காலம் வரையில் இந்திய சர்க்காரில் ஒரு மந்திரி பதவிக்கு இணையான உத்தியோகம் வகித்து வந்தவர் ஸர் பிரோஸ்கான் நூன். அவர் 'இந்தியா' என்று ஓர் அரிய புத்தகம் எழுதி வெளியிட்டுள்ளார். அதில், அக்பர் ராஜாங்கத்தின் சிறந்த கவிஞரான அபு-அல்-பஸல் எழுதியுள்ள இந்த விஷயத்தை; மேற்கோள் தந்திருக்கிருர்.

யாமல் தடுப்பதற் காகத்தான்; ஒரே பரம்பொருளை வணங்குவதற்கு, தாங்கள் இந்தக் கடமைகளை யெல்லாம் புரிந்தாகவேண்டுமென்று அவர்கள் கருதுகிருர்கள்.

தங்கள் பிரார்த்தனைகளி லெல்லாம், சூரியனின் ஆசியை அவர்கள் வேண்டுகிருர்கள்.

பரம்பொருளை அவர்கள் எச்செயலுமற்ற பரப்பிரம்மம் என்று மதிக்கிருர்கள். உலகத்தை ஆக்கும் கடவுள் பிரம்மா என்றும், அளிக்கும் கடவுள் விஷ்ணு என்றும், அழிக்கும் கடவுள் ருத்திரன் என்றும் அவர்கள் நம்புகிருர்கள்.

தெய்விகத் தூய்மையிலும், இந்திரிய போகங்களை யெல்லாம் துறந்த துறவிலும், வேறெந்த மதத்திலும் காணக் கிடைக்காத இணையற்ற உத்தமர்கள் ஹிந்துக்களிலே இருக்கிருர்கள்.

பிரபஞ்சம் அநாதியானது என்று அவர்கள் நினைக்கிருர்கள். ஆனல், அவர்களில் சிலர் அதற்கு முடிவுமட்டும் உண்டு என்று எண்ணுகிருர்கள்.

வேறு எந்த ஜாதியானும் பிராம்மணனுய் மாற இடம் கொடுக்க மாட்டார்கள்; பிராம்மணன் வேறு எந்த ஜாதிக்கேனும் மாறவும் இடம் கொடுக்க மாட்டார்கள் - இதுதான் ஆச்சரியம்.

அவர்களுக் கிடையிலே அடிமைகள் கிடையாது.

அவர்கள் யுத்தம் செய்யப் புறப்பட்டாலும் சரி; அவர்கள் மீது யாராவது படையெடுத்தாலும் சரி; அவர்கள் தங்கள் ஸ்திரீகளை யெல்லாம் ஓர் இடத்தில் திரட்டி வைத்து, அந்த இடத்தைச் சுற்றிலும் மரம், வைக்கோல், எண்ணெய் இவைகளைப் போட்டு நிரப்புவார்கள். கருங்கல் நெஞ்சம் படைத்த சில புருஷர்கள் அங்கே அந்த ஸ்திரீகளுக்குக் காவல் இருப்பார்கள். யுத்தத்திலே ஈடுபட்டவர்கள் உயிர்தப்ப முடியுமென்ற நம்பிக்கைக்கு இடமில்லாமல் போகுமானல், காவலிருக்கும் இந்தப் புருஷர்கள், அந்த மரம் முதலியவைகளுக்குத் தீவைத்து விடுவார்கள். ஸ்திரீகளெல்லாம் எரிந்து சாம்பலாய்ப் போவார்கள்.

ஆபத்துக்குள்ளானவனுவது-அவன் முன்பின் தெரியாத ஓர் அந்நியனுயிருந்தாலும் சரி-அபயம் என்று அவர்களிடம் தஞ்சம் புகுந்தால், தங்கள் உயிர், பொருள்,புகழ் மூன்றையும் துறந்தாவது அவனைக் காப்பாற்றி விடுவார்கள்.

முன்காலத்திலே, ஒண்டிக்கொண்டியான தொந்த யுத்தம் நடத்தி, ஒருவருக் கொருவர் இழைத்த அவமானத்துக்குப் பரிகாரம் தேடிக்கொள்ளும் வழக்கம் அவர்களிடையே இருந்து வந்திருக்கிறது. இப்போது அந்த வழக்கத்தை, அவர்கள் கைவிட்டு விட்டார்கள்.



## இரண்டு வித மூடர்கள்.

மூடர்கள் இரண்டு வகை: "இது பழசு; ஆகையால், நல்லது" என்பவர் ஒரு வகை. "இது புதிசு; ஆகையால் மேலானது" என்பவர் மறு வகை.

—டின் இஞ்சு, (பிளான்)

# வெட்டுக் கிளி

செந்தாமரை

வெட்டுக் கிளியே! வெட்டுக் கிளியே!
மட்டில் மகிழ்ச்சி மனதினுட் புகுந்து
விட்டதை விளக்கத் துள்ளிக் குதிக்கும்
வெட்டுக் கிளியே! வெட்டுக் கிளியே!

தனித்து நிற்கும் நீர்த்துளி தன்னை
இனத்துடன் இணைக்கவோ இங்கு நீ வந்தாய்!
இல்லை எனில்ஏன் இங்குஇப் பச்சைப்
புல்மேல் பம்மி இருக்கும் பனித்துளி
தன்னை விழ்த்தித் திரட்டிச் சேர்த்துப்
பின்னிப் படரும் நூல்வலை யாக்கி
வெள்ளி ஜரிகை வனப்பதற் கேற்றி
உள்ளம் மகிழ்கிறாய் வெட்டுக் கிளியே!

உயர்புல் மெத்தை உருக்கும் நல்ல
நயமிகு பச்சையை நிறமெனக் கொண்டுயிர்
வாழ்க்கை நடத்தும் வெட்டுக் கிளியே!
சூழ்நிலை தெரிந்தே இருக்கும் இடத்திற்
கேற்ற வாழ்க்கை இங்கே நடத்தும் உன்
ஆற்றலை யறிந்துனை மெச்சுறேன் கிளியே!

கிளி நிறம் உன்னைக் கவ்விக் கொண்டதால்
கிளியென் றுன்னைக் கூப்பிடும் மக்கள்
வளர்க்கும் பயிரினை வெட்டுங் கிளியே!
கிளியினைக் கூண்டில் அடைத்ததை மக்கள்
வருத்தும் விதத்தைக் கண்டுஉன் உள்ளம்
எரிவதைக் காட்டவோ இங்கவர் வளர்த்த
பயிரினை யழித்துப் பாழடிக் கின்றாய்!

துயர்படு கிளிதன் கூண்டில் துடிக்கையில்
சிதறித் தெறித்த சிறுசிற கெல்லாம்
மிதந்து வந்துஇப் பூமியில் விழுந்து
உயிரெடுத் துன்றன் வடிவெடுத் துலகோர்
வியர்க்க உழைத்து வளர்த்த பயிரினை
வெட்டி யழித்து வஞ்சம் தீர்த்து
நட்டம் விளைப்பினும் இன்னமும் மனிதன்
கிளியினைப் பிடித்துக் கூண்டி லடைத்துளம்
களிப்பதைச் சற்றும் நிறுத்த வில்லையே!

✲

# சூதாடி

**வில்லியம் ஸரோயன்**

"என் நண்பன் சூதாடி கஸ் என்பவனை உனக்குத் தெரியாதே? அவனைப்பற்றி நீ தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். ஏன் என்றால், ஊரார் அவனை ரொம்ப நாள் வரையில் மறக்கவே முடியாது" என்றான் ஜிம்.

ஜிம் அப்போது கொஞ்சம் குடித்திருந்தான். சூதாடி கஸ்ஸைப் பற்றி நான் தெரிந்துகொள்ளவேண்டும் என்று ஜிம் ஏன் சொன்னான் என்றால், கஸ்ஸைப் பற்றி அவன் எனக்குச் சொல்ல விரும்பியது தர்ன் காரணம். கஸ்ஸின் உயரம் எழடிக்கு ஓர் அங்குலம் குறைவு என்று தோன்றுகிறது. பீப்பாய் மாதிரி பருமன். ஆட்டுக் குட்டிபோல் சாந்தம். கஸ் மரியாதை செய்யத் தொடங்கினால், நம் தலை கிறு கிறுத்துப் போய்விடுமாம். சகல அம்சங்களிலும் அவன் ஒரு மேதையாம்.

கஸ் ஐந்து மனைவிகளைக் கலியாணம் செய்துகொண்டானாம். அப்படியிருந்தும், ஒரே ஒருத்தியைக் கூடக் கொலை செய்யவில்லையாம். கஸ் அவர்களைத் தள்ளி வைத்திருக்கிறான்; கைவிட்டு ஓடியிருக்கிறான். ஆனால், இத்தனையையும் மிக்க மரியாதையாகவே செய்திருக்கிறான். தொப்பியைக் கையிலெடுத்துக் கொண்டு, தலைவணங்கி, மகா சாந்தமான ஒன்றிரு வசவுகளை மட்டும் வைதுவிட்டே, இப்படிச் செய்திருக்கிறான். மரியாதைக்குப் பயந்தும் அந்தப் பெண்களைக் கொல்லும் நிர்ப்பந்தம் தனக்கு ஏற்படாதிருக்கவேண்டும் என்ற நல்லெண்ணத்தினாலுமே, அவன் இப்படிச் செய்திருக்கிறான். அதனால் தனக்கு ஏற்படக் கூடிய சொற்ப அசௌகரியம் தான் அவனுக்கு எதற்கு?

தான் விட்டு விட்டு விலகப் போகிற ஒரு மனைவியிடம், கஸ் என்ன சொல்லுவானாம் தெரியுமோ? "என் கண்ணே! உனக்குக் காப்பி குடிக்கப் பத்துக் காசு இல்லாமல் போனாலும் சரி; ரொட்டியும் காப்பியும் வாங்கப் பதினஞ்சு காசு இல்லாமல் போனாலுமே சரிதான்: என்னிடம் நீ கட்டாயம் வந்து வாங்கிக்கொள்ள வேண்டும். வராமல் போனாயோ எனக்கு மகா வருத்தமாய் இருக்கும்" என்று சொல்லுவானாம்.

ஜிம் குடி வெறியின் குறும்போடு தலையை ஆட்டிக் கொண்டே, "இதை மாத்திரம் பார்த்துக்கொள்; கஸ்ஸுக்கு யாரையாவது பிடிக்கவில்லையோ, அவன் தொலைந்தான். ஆனால், ஐயோ பாவம் என்று கஸ் பின்னால் இரக்கப்படுவான்" என்று கூறினான்.

---

*இன்று முன்னணியில் நிற்கும் அமெரிக்க ஆசிரியர்களில் ஒருவர் வில்லியம் ஸரோயன். அவருடைய கதைகளைக் கதைகள் என்றோ, நாடகங்களை நாடகங்கள் என்றோ சொல்ல முடிய வில்லையே என்று சில விமர்சகர்கள் ஏங்கினார்கள். "அவைகள் ஜீவனோடு துடிக்கின்றன அல்லவா? அது போதும். அவைகளை எந்தப் பெயரிட்டு வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்களேன்" என்றார் ஸரோயன். ஆம், இந்தக் கதையும் அப்படிப்பட்ட ஒன்று தான்.*

"ஹாலிவுட் பீட் இருக்கிறன் பார்; அவனை இன்று காலையில் ஓர் அமுக்கு அமுக்கிவிட்டேன். பாவம்! அந்தச் சூதாடிப் பயல் என்ன சங்கடப் பட்டானே!" என்று, கஸ் மிக்க வருத்தத் தோடு, தன் குதிரைப் பந்தயச் சூதாடி சகாக்களிடம் சொல்லிக் கொள்வானும்.

"பௌவல் தெருவில் ஒரு சாராயக் கடை இருக்கிறதே, தெரியுமா? அதில்தான் கஸ் செத் தான். சாகும்போது அவனுக் குத் தொண்ணூறு வயசு. விடி யற்காலை ஒன்றே முக்கால் மணி யிருக்கும். அப்போது குடித்துக் கொண்டே, அவன் செத்தான்" என்று ஜிம் சொன்னன்.

"இரண்டு நாள், இரண்டு இரவு பகல் கழியும் வரையில், கஸ் செத்தது யாருக்குமே தெரி யாது. ஏனென்றல், அவன் தூங்குகிறப் போலவே யிருந் தான். யாரும் அவன் கிட்டப் போய் அவனை எழுப்பிப் பார்க் கப் பயந்தார்கள்.

"கஸ் பெரிய தூங்கு மூஞ்சி. சிக்காகோவில் ஒரு சமயம் நல்ல குளிர் காலம். கஸ் என்னமோ சந்தோஷமில்லாமல் இருந்தான். ரிவரீ ஹௌஸ் என்ற ஓட்டலில் ஒவ்வோர் அறையாய் மாற்றி மாற்றி இரண்டு மாச காலம் தொடர்ந்து அவன் தூங்கினன். ஒவ்வொரு நாளும் இரவிலே ஓட் டல்காரர்கள் புதிசு புதிசாய் ஒவ் வொரு பெண்ணை, அவனுடன் உறங்க அனுப்புவார்கள். மூன்று நாளைக் கொரு தடவை அவ னுக்கு க்ஷவரம் செய்துவிட, ஒரு நாவிதனையும் அனுப்புவார் கள். இப்படி வெளியிலிருந்து வருகிறவர்களுடைய கையைத் தொட்டால் போதும்; இன்னும் வாடை நிற்கவில்லை என்பதை, கஸ் ஊகித்துச் சொல்லிவிடு வான். 'அட கடவுளே! உள்ளே வா, பெண்ணே; இங்கே நல்ல கதகதப்பாய் இருக்கிறது. தெய் வமே! இந்த உலகத்திலே கருணை யென்பதே கிடையாதா!' என்று கஸ் புலம்புவான்.

"அப்போது கஸ்ஸுக்கு வயது சுமார் எழுபது இருக்கும்" என்றுன் ஜிம்.

மேலும் தொடர்ந்து, ஜிம் சொன்னதாவது: "ஒரு நாள் இரவு கஸ் ஒரு யுவதியின் சின் னக் கையைத் தொட்டான். அது நல்ல உஷ்ணமா யிருந்தது. குளிர்காலம் முடிந்தது என்று கஸ் நினைத்து விட்டான். படுக் கையிலிருந்து துள்ளிக் குதித் தான். லேசான விளையாட்டு உடுப்பு ஒன்றை அணிந்துகொண் டான். ஓட்டலுக்கு வெளியே ஓர் அடியெடுத்து வைத்தான்; வீதி யெல்லாம் ஒரே வெள்ளை யாய்ப் பனிப் படலம் சூழ்ந்திருக் கக் கண்டான். அவ்வளவு தான்; டக்கென்று உள்ளே திரும்பிப் போய் விட்டான். விஷயம் அப் போதுதான் விளங்கியது. அந்தப் பெண்ணுக்குக் காய்ச்சல்! கஸ் தன்னுடைய அறைக்குத் திரும் பியபோது, அவளிடம் வெகு மரியாதையாய் நடந்து கொண் டான்.

"தன் தொப்பியைக் கையிலே எடுத்துக்கொண்டான். தாழக் குனிந்து வணங்கினன். 'என் அருமைச் சீமாட்டியே! காலநிலை, பருவ மாறுதல்களைப் பற்றி இனி என்னை நீ இம்மாதிரி ஏமாற்றக் கூடாது; உன்னை மன்றுடிக் கேட்டுக் கொள்கிறேன். உன் கையின் உஷ்ணத்தைக் கண்டு, குளிர்காலம் நின்று கோடை காலம் வந்துவிட்ட தென்று எண்ணி நான் ஏமாந்துவிட்

டேன். ஒரு வேளை உனக்கு ஏதாவது நோயா யிருக்குமோ? அப்படியானல், தட்சணமே இந்த அறையை விட்டு வெளியே போய்விட வேண்டுமென்று உன்னைப் பிரார்த்திக்கிறேன்' என்று சொன்னன்.

"இது தான் கௌரவமான ஒரு கனவானுக்கு அடையாளம். இல்லையா?'' என்ருன் ஜிம்.

அப்புறம் ஜிம் சொன்னதாவது :
"கஸ் மகா புத்திமான். ஆனல், பள்ளியில் அவ்வளவு படித்த தில்லை.''

"கஸ் என்பதே அவன் பெயரா? முன்னல் அவனுக்கு என்ன பெயர்?'' என்று நான் கேட்டேன்.

"அது யாருக்கும் தெரியாது. ஒரு சமயம் அல்பர்களான சில சூதாடிகள் சேர்ந்து ஒரு கேவலமான கதையைக் கட்டிவிட்டார்கள்: ஓர் ஆஸ்திரிய ராஜாவுக்கும் அமெரிக்காவிலிருந்து ஊரூராய் நாட்டியம் ஆடிவந்த ஒரு கூத்தாடிப் பெண்ணுக்கும் பிறந்த சோரக் குழந்தை என்று, கஸ்ஸைப்பற்றி அவர்கள் சொன்னர்கள். இன்னொரு வதந்தியும் உலவியது; ரட்சண்ய சேனை உத்தியோகஸ்தர் ஒருவருக்கும் ஒரு பிச்சைக்காரப் பெண்ணுக்கும் பிறந்தவன் என்று, வேறு சிலர் அவனைச் சொன்னர்கள். ஆனல், உண்மை வேறே என்று தோன்றுகிறது: அவன் நியூ இங்கிலாந்து சர்ச்சைச் சேர்ந்த தம்பதிகளுக்குப் பிறந்தவன் என்றே தோன்றுகிறது. ஏனென்ருல், சாகும் வரையில், அவனுடைய பக்தி குன்றவே யில்லை'' என்ருன் ஜிம்.

"பக்தியா! எதிலே?'' என்று நான் கேட்டேன்.

"எதிலுமே தான். அவன் மிக்க தெய்வ பக்தி நிறைந்தவன். இது முப்பது வருஷத்துக்கு முன்னே நடந்தது: மிஸ் ரெபக்கா என்று மகா அழகான வாலிபக் குதிரை ஒன்று இருந்தது. அது ஜயிக்கவே ஜயிக்காது என்று, உலகம் பூராவுமே மறுத்தது. இது ஒரு வேளை உனக்கு ஞாபகம் இருக்குமோ என்னமோ. இந்தக் குதிரை ஜயித்தால், ஒன்றுக்கு நூறு கொடுப்பதாக, எல்லாரும் பந்தயம் போட்டார்கள். கஸ் எப்போதுமே தெய்வ பக்தி உள்ளவன் அல்லவா? மிஸ் ரெபக்கா தான் ஜயிக்கும் என்று, அவன் ஆயிரம் டாலர் பந்தயம் கட்டினன். ரெபக்கா ஜயித்து விட்டது'' என்ருன் ஜிம்.

"அது என்னமாய் ஜயித்தது?'' என்று நான் விசாரித்தேன்.

"அகஸ்மாத்தாய் ஒரு விபத்து நேர்ந்தது. மற்றக் குதிரைகளெல்லாம் அதிலே சிக்கிவிட்டன.''

"அப்படி என்ன விபத்து?''

"துரதிர்ஷ்டவசமான விபத்து. மிஸ் ரெபக்காவுக்கு முன்னே எட்டுக் குதிரைகள் கால் மைல் தூரத்தில் வந்து கொண்டிருந்தன. அவை ஒன்ருேடொன்று இடறிப் பலமாய்க் காயம்பட்டு விழுந்துவிட்டன. மிஸ் ரெபக்கா மாத்திரம் தன்னந்தனியாய்ப் பந்தய எல்லையை எட்டி விட்டது. ஒரு மைல் தூரத்தை ஒரு குதிரை, எவ்வளவு மெதுவாய் ஓடி ஜயிக்கலாம் என்ற விஷயத்தில், உலகத்து ரெக்கார்டையே மிஸ் ரெபக்கா முறியடித்துவிட்டது'' என்ருன் ஜிம்.

"மற்றக் குதிரைகள் எல்லாம் இடறி விழுந்ததற்கு என்ன கார

ணம்?" என்று நான் கேட்டேன்.

"தெய்வாதீனம் தான். என்ருலும், சில அல்பர்கள் ஒரு கதை கட்டி விட்டார்கள். ஏதோ இரண்டு வழிகள் உண்டாம். அந்த இரண்டில் ஒரு வழியைக் கடைப்பிடித்து, கஸ் த்ரான் குதிரைகளை இடறிவிழச் செய்திருக்கிருன் என்று அவர்கள் சொன்ஞர்கள்" என்ருன் ஜிம்.

"இரண்டு வழிகளா? அவைகள் யாவை?"

"கஸ் ஏதோ ஒரு மந்திரவாதியைப் பிடித்து வந்திருக்கிருஞம். நல்ல புத்திசாலிகள் எல்லாம் ஏராளமாய்ப் பணம் கட்டிய கன்ஸாஸ் ஸிட்டி என்ற குதிரை தளர்ந்து தள்ளாடிப் போகும்படி, அந்த மந்திரவாதியைக் கொண்டு கஸ் மந்திரம் போடச் செய்திருக்கிருஞம். இப்படி ஒரு கோஷ்டியார் சொன்ஞர்கள். எட்டு மந்திரவாதிகளைப் பிடித்து, எட்டுக் குதிரைகளுமே அப்படித் தளர்ந்து தள்ளாடும்படி, அவன் செய்திருக்கிருன் என்று இன்ஞெரு கோஷ்டியார் சொன்ஞர்கள். இரண்டு கதைகளுமே பொய், பொய்" என்ருன் ஜிம்.

"அப்படியாஞல், பின்னே என்னதான் அவைகளை இடறி விழச்செய்தது?" என்று நான் கேட்டேன்.

"தெய்வச் செயல்தான். தன் காலத்திலேயே மிகச்சிறந்த தெய்வ பக்தியுடைய சூதாடிகளில் ஒருவன் கஸ். அவர்களுக்குள்ளே முதன்மையானவன் என்றுகூட அவனைச் சொல்லலாம். கடவுளை அவன் பிரார்த்தித்தபோது, நான் அவன் பக்கத்திலேயே இருந்தேன். அவன் பிரார்த்தித்த பாஷையை என்னவென்பேன்! அதைத் திருப்பிச் சொல்லக்கூட யாராலும் முடியாது. அதிலேதான் என்ன கவிதையும் வேகமும் நிறைந்திருந்தது! அப்போது எனக்குப் பதினேழே வயது. அப்படியிருந்தும், அந்தப் பிரார்த்தனையைக் கேட்டபோது, எனக்குக் கண்ணீர் வந்துவிட்டது."

**இயற்கை ஸினிமா!**

வட சீனவில் 'கோபி' என்று ஒரு பாலைவனம் இருக்கிறது. அதற்கு 'இயற்கை ஸினிமா' என்று ஒரு பெயர் உண்டு. ஏனென்ருல், அங்கே மிக விசித்திரமான கானல் நீர்-உருவெளிகள் காணப்படுகின்றன. அந்த உருவெளிகள் வெகு வேகமாய் ஒன்றுக்குப்பின் ஒன்ருய்த் தோன்றி மறைகின்றன. அங்கே செல்லும் ஒரு பிரயாணி, பல காட்சிகளைக் காணலாம்; மலை ஜாதியார் கூட்டம் கூட்டமாயிருப்பது போலவும், அவர்களுடைய ஆட்டு ரோமக் கூடாரங்கள் நிற்பது போலவும், அவர்கள் தீ மூட்டிக் குளிர்காய்வது போலவும், பல காட்சிகள் அந்தப் பிரயாணிக்குத் தென்படும். இந்தச் சமயத்தில் திடீரென்று மணல் கிளம்பி வாரியடித்து அத்தனை காட்சிகளையும் அழித்துவிடும். மறுபடியும் புதிய காட்சிகள் தோன்றத் தொடங்கும்.

—கிரிஸ்தியன் ஹெரால்ட்.

"என்ஞல் இதை நம்ப முடியவில்லை. நிஜமாகவே உனக்குக் கண்ணீர் வந்து விட்டதா?" என்று நான் கேட்டேன்.

"ஆமாம், நிஜமாகவே" என்ருன் ஜிம்.

"மிஸ் ரெபக்கா மீது நீ எவ்வளவு பணம் கட்டியிருந்தாய்?"

"பத்து டாலர்."

"லாபம் தானே. அப்படியிருக்க, நீ ஏன் கண்ணீர் விட்டாய்?"

"பிரார்த்தனையின் சக்தியில் எனக்குக் கஸ் அவ்வளவு நம்பிக்கை இல்லாமல் போய்விட்டதே என்றுதான். கஸ் எவ்வளவு தெய்வ பக்தி யுடையவனா யிருந்தானோ அவ்வளவு தெய்வ பக்தி எனக்கும் இருந்திருந்தால், நான் முப்பது டாலர் கட்டியிருப்பேன்."

"உன்னிடம் இருந்ததே அவ்வளவு பணந்தானா?" என்று நான் கேட்டேன்.

"இல்லை. நாற்பது டாலர் இருந்தது."

"அந்த நாற்பது டாலர் பூராவையும் அப்படியே கட்டியிருப்பாயோ?"

"இல்லை. முப்பது டாலர்தான் கட்டியிருப்பேன்."

"ஏன்?"

"ஏனென்றால், கஸ்ஸைப் போல் எனக்கு அவ்வளவு தெய்வ பக்தி இல்லாததே காரணம். அந்தக் குதிரை ஜயிப்பது மிக நிச்சயம் என்று எனக்குத் தெரிந்திருந்தால்கூட, நான் முப்பது டாலர்தான் கட்டியிருப்பேன்" என்றான் ஜிம்.

"இதென்ன விசித்திரமா யிருக்கிறதே! நானாயிருந்தால், என் கையில் கிடைத்திருக்கக் கூடிய ஒவ்வொரு செப்புக் காசையும் கட்டி யிருப்பேன்" என்றேன் நான்.

"ஆஹா! கஸ்ஸைப் போலவே, அவ்வளவு தெய்வ பக்தி உனக்கும் இருக்கிறது!"

"தெய்வ பக்தியு மில்லை, மண்ணாங்கட்டியு மில்லை. ஒரு குதிரை நிச்சயமாய் ஜயிக்கும் என்று எனக்குத் தெரிந்திருந்தால், அதன்மீது என் சகல சொத்தையும் நான் பந்தயம் கட்டி விடுவேன்."

"உன் பெற்றோர்களும், ஒரு வேளை கஸ்ஸின் பெற்றோர்களைப் போலவே நியூ இங்கிலாந்து சர்ச்சைச் சேர்ந்தவர்களா யிருப்பார்களோ!"

"இல்லை" என்று நான் சொன்னேன்.

"என்றாலும், உனக்கு மிக்க தெய்வ பக்தி யிருக்கிறது" என்றான் ஜிம்.

"அது போகட்டும். மிஸ் ரெபக்கா ஜயித்ததே, அன்று கஸ் என்ன சொல்லிப் பிரார்த்தித்தான்? அது உனக்கு ஞாபகமிருக்கிறதா?"

"அதில் கேவலம் சில வார்த்தைகளைத்தான் எனக்கு ஞாபகமிருக்கிறது" என்றான் ஜிம்.

"அவைகள் என்ன வார்த்தைகள்?"

"தெருவிலே சாதாரண மக்கள் பேசுவார்களே, அப்படிப்பட்ட வார்த்தைகள்தான். அந்த வார்த்தைகளே என் வாயிலிருந்தோ, உன் வாயிலிருந்தோ, சாராயக்கடை கார்லீயின் வாயிலிருந்தோ வருமானால், ஆபாசமாய்த்தான் இருந்திருக்கும். ஆனால், கஸ்ஸின் வாயிலிருந்து வந்ததால், யாருக்குமே அவைகள் ஆபாசமாய்த் தோன்றாது" என்று ஜிம் சொன்னான்.

"அது சரி! அவன் என்ன சொன்னான்?"

"'விழுங்கள்! தட்டுவாணிக் கழுதைகளே, விழுங்கள்!' என்றுதான் அவன் சொன்னான்."

"இது பிரார்த்தனையாகத் தோன்றவில்லையே!"

"வார்த்தைகளில் ஒன்றுமில்லை; அவைகளை உச்சரிக்கிற வாயில்தான் இருக்கிறது விசேஷம். அடுத்த நாள் இன்ன குதிரைகள் மூன்றும் நிச்சயமாய் ஜயிக்கப் போகின்றன என்று அவன் சொல்லிவிடுவான். இந்த ஊரில் எத்தனை கொள்ளைக்காரர்கள் இருக்கிறார்கள், எத்தனை ரங்காட்டக்காரர்கள் இருக்கிறார்கள் என்றெல்லாம் அவன் ஜாபிதாக் கொடுத்து விடுவான். அவர்களிடம் எப்படிச் சிநேகம் பிடிப்பது என்று வழி சொல்லித் தருவான். மிக்க அழகான சீமாட்டிகள் எங்கெங்கே யிருக்கிறார்கள் என்று சொல்லி, அவர்களின் விலாசமெல்லாம் தருவான்."

"அப்படியா!" என்று நான் மகிழ்ந்தேன்.

"கஸ் தான் போய்விட்டானே! மேதையிலோ, தயாளத்திலோ, பக்தியிலோ, நான் அவனுக்குத் துளியும் சமமானவன் அல்ல. என்றாலும், நாளைக்கு ஜயிக்கப் போகிற ஒரே ஒரு குதிரையின் பெயர் மட்டில் நான் உனக்குச் சொல்ல முடியும். தவிர, என்னைக் கேட்டால், ரங்காட்டக்காரர்களின் சிநேகமே வேண்டாம் என்றுதான் சொல்லுவேன். எந்தச் சூதாட்டமும் வேண்டாம் என்றே சொல்வேன். ஒரே ஓர் அழகியின் விலாசம் வேண்டுமானால் கொடுப்பேன்."

"இந்த இரண்டும் போதும் எனக்கு. சொன்னால், ரொம்பவும் நன்றி" என்றேன் நான்.

ஜிம் குதிரையின் பெயரைச் சொன்னான்; அழகியின் விலாசமும் எழுதிக் கொடுத்தான்.

"கஸ் தனது அந்திம காலத்தில், கிருஸ்தவ தர்ம சாஸ்திரத்தில் மிகுந்த சிரத்தை கொண்டிருந்தான். அதில் ஒருவர் காட்டக்கூடிய ஆர்வத்திலும், திறமையிலும், மேரி எட்டி பேக்கர் கூட அவனை மிஞ்ச முடியாது" என்றான் ஜிம்.

"இப்படி ஒரு குதிரை இருக்கிறதா? நான் கேட்டதில்லையே!"

"மேரி பேக்கர் எட்டி என்பது குதிரையின் பெயர் அல்ல, தம்பீ. பாஸ்டன் நகரிலுள்ள ஒரு பெண்மணியின் பெயர் அது. அவள் மகா அழகி; துணிச்சல் மிகுந்தவள். ஒரு நாள் இராத்திரி திடீரென்று அவளுக்கு என்னவோ அருள் வந்துவிட்டது. பிரமாதமான ஒரு தத்துவத்தைக் கண்டுபிடித்துவிட்டாள். 'துன்பம் என்று ஒன்றில்லை; அது சுத்தப் பிரமை' என்பதுதான் அவள் கண்டுபிடித்த தத்துவம்" என்றான் ஜிம்.

"எனக் கென்னவோ இந்தத் தத்துவத்தில் சந்தேகமே தோன்றுகிறது."

"ஆனால், உனக்கு மாறாக, கஸ் என்ன சொன்னான் தெரியுமா? இந்தத் தத்துவத்தில் அடியோடு உண்மை யில்லாமல் போகவில்லை என்றே சொன்னான். ஏதோ சுற்றி வளைத்துக்கொண்டு நிர்ணயித்த சித்தாந்தமா யிருந்தாலும், கடைசியில் இதில் உண்மை இருக்கிறதென்றே அவன் ஒப்புக்கொண்டான்."

"ஒப்புக்கொண்டானா? எப்படி? சொல்லு, பார்க்கலாம்."

"அலபாமா மாகாணத்தைச் சேர்ந்த மொபீல் நகரில் உள்ள ஒரு சூதாடியுடன், கஸ் ஒரு சமயம் கைச் சண்டை போட்

டான். அதில், கஸ்ஸின் மணிக்கட்டு முறிந்து போயிற்று" என்ருன் ஜிம்.

"என்ன நடந்தது?"

"அவன் ஒரு நீக்ரோ சூதாடி. ஒரு கையிலே அலகு விரித்த ஒரு க்ஷவரக் கத்தியைப் பிடித்துக்கொண்டான். மறு கையிலே ஒரு நாற்காலியைத் தூக்கிக் கொண்டான். வாயை 'ஆ!' என்று பிளந்து கொண்டான். கஸ்ஸின் கையைக் கடித்துவிட்டான். கஸ் குழந்தை மாதிரி ஊளையிடத் தொடங்கி விட்டான். ஊளையிட்டுக்கொண்டே, நீக்ரோ கனவானின் வயிற்றிலே விட்டான் ஓர் உதை. இந்த வகுப்பாரின் கிருஸ்தவ மதம், நாட்டுப்புறக் கதைகளையும் கற்பனையையுமே அடிப்படையாய்க் கொண்டிருக்குமோ என்று நான் அஞ்சுகிறேன்" என்ருன் ஜிம்.

"ஜிம், நேரமாகிவிட்டது. நான் போகவேண்டும். மறுபடியும் சமீபத்தில் நாம் சந்தித்தால், உன் நண்பன் கஸ்ஸைப்பற்றிய மீதிக் கதையையும் நீ எனக்குச் சொல்லலாம்" என்றேன் நான்.

ஜிம் உடனே கர்லீயைத் தன் அருகே அழைத்துக்கொண்டான். "சூதாடி கஸ்ஸைத் தான் உனக்குத் தெரியுமே. அவனைப் பற்றிய இன்னும் சில விவரங்களைச் சொல்லுகிறேன், கேள். அவைகளை நீ தெரிந்து கொள்வது நல்லது" என்ருன்.

"அட தம்பீ, எனக்குக் கஸ்ஸைப் பற்றியும் தெரியும்; உன்னைப் பற்றியும் தெரியும்; உலகத்திலேயுள்ள வேறே எவனைப் பற்றியும் தெரியும். தெரியவேண்டிய அத்தனையும் தெரியும். உன் கதையை நாளைக்கு வைத்துக் கொள்; இன்றைக்கு வேண்டாம்" என்று சொல்லிக் கர்லீ போய்விட்டான்.



## ஸோவியத் கொடி

ஸோவியத் ருஷ்யாவின் கொடி, சிவப்பு நிறம். சம்மட்டியும் அரிவாளும் போட்டிருக்கும். அதன்மீது மேலே ஐந்து நட்சத்திரங்கள் போட்டிருக்கும். அவையெல்லாம் மஞ்சள் நிறம்.

எதிர்ப்பைக் குறிப்பது செங்கொடி. வெகு காலமாகவே, அது புரட்சியின் சின்னமாய் இருந்துவருகிறது. சுதந்தரத்துக்காகவும் சுயேச்சைக்காகவும் மக்கள் சிந்திய ரத்தத்தைக் குறிப்பது கொடியின் சிவப்பு வர்ணம். ஆலைத் தொழிலாளர்களும் விவசாயிகளும் ஒற்றுமைப்பட்டிருப்பதைக் குறிப்பது சம்மட்டியும் அரிவாளும். ஐந்து நட்சத்திரங்களும் உலகத்தின் ஐந்து கண்டங்களைக் குறிப்பிடுபவையாகும்.

—ஸெர்வீஸஸ் மகஸீன்.

## வழுக்கை தீருமா?

வாலிபத்தில் தலையிலே தண்ணீர் படுவதாலும், கெட்டியான கச்சைகளைத் தலையில் கட்டிக்கொள்வதாலுமே வழுக்கை விழுகிறது என்பது உண்மையல்ல.

சாதாரணமாய் எவருக்கும் தலையில் வழுக்கை விழுவது, பரம்பரையால் சேரிடும் வியாதி. அதைத் தடுக்க ஒரு வைத்தியமும் கிடையாது.

—வி. வார்ட் கிராம்டன், எம். டி.

# பேய் உலக சிருஷ்டி

பரதன் குமரப்பா

முதலாளித்துவத்திலே, கவர்ச்சியான, சிலாகிக்கத் தக்க விஷயம் நிறைய இருந்த போதிலும், நம்மை நிறுத்தி வைத்து யோசிக்கும்படி செய்யக் கூடியதும் அதிலே நிறைய இருக்கவே செய்கிறது. போன நூற்றாண்டிலே, அதன் இளமைப் பருவத்திலே, அதன் சாதனைகளைக் கொண்டு முதலாளித்துவம் உலகத்தை ஒளி வீசி மயக்கியது. தனி நபரின் சுதந்தரத்தை அது தனக்கு அடிப்படையாகக் கொண்டிருந்தது. பிரஞ்சுப் புரட்சிக் காலத்தில் பெரும் கூட்டங்களைக் கொலைக்களத்துக்கு அனுப்பியது இந்தச் சுதந்தரம் என்ற கருத்துத்தான். தனி நபர் சுதந்தரத்தைப் பொருளாதார முறையின் அடித்தளமாகக் கொண்டு, இந்த மாதிரி பிரமிக்கத் தக்க காரியங்களைச் சாதித்து, எல்லோர் மனத்தையும் அது கவர்ந்து விட்டது. ஆனால், அந்த நூற்றாண்டு முடிந்ததோ இல்லையோ, நிலைமை சரிப்பட்டு வரவில்லை. ஏற்கெனவே, முதலாளித்துவம் தனது முயற்சியின் எல்லைக் கோட்டை விட்டு, அதிகமாய்த் தாண்டிப் போய் விட்டது. ஒரு சில வருஷங்களுக்குள்ளேயே, உலகப் போரில் அமிழ்ந்து விட்டது. அப்புறம், வியாபார மந்தம், வேலையில்லாத் திண்டாட்டம் இவற்றுள்ளும், மற்றுமொரு போரிலும் உலகம் ஆழ்ந்துவிட்டது. இந்த யுத்தத்தின் ஜுர வேகம் இன்னும் தணிந்தபாடில்லை. நம்முடைய இன்றையப் பொருளாதாரத் தீமைகளுக்குக் காரணம் முதலாளித்துவ முறைதான் என்பது வரவரத் தெளிவுபட்டு வருகிறது. மனித சமுதாயமும் நாகரிகமும் அழிந்து போகாமல் அவற்றைக் காப்பாற்றுவதானால், ஒன்று இதைக் கை கழுவிவிட வேண்டும்; அல்லது, பரிபூரணமாய் இதை உருமாற்றிவிட வேண்டும். போன நூற்றாண்டில் இருந்தவர்களைவிட நம்மால் முதலாளித்துவத்தின் உண்மையான பெறுமானத்தை எடை போட்டுத் தீர்ப்பளிக்க முடியும். அந்த வசதி நமக்கிருக்கிறது. ஏன் அப்படி? முதலாளித்துவம் அந்தக் காலத்தில் பரிபூரணமாக வளர்ச்சி பெற்றுவிடவில்லை. பிரிட்டனில் அது செழித்து, நிறையப் பயன் தந்திருந்தது. பிரிட்டன்தான் முதல் முதலில் பேரளவில் உற்பத்திசெய்யமுற்பட்டது. இன்று, பிற நாடுகளும் கைத்தொழில் மயமாகிவிட்டன. பிரிட்டனுக்குள்ள சந்தைகள் நாளுக்கு நாள் சுருங்கிக்கொண்டு வருகின்றன. ஒவ்வொரு நாடும் தனது தேவைக்கு வேண்டிய மட்டும் பெரிய அளவிலே உற்பத்தி செய்ய விரும்புகிறது. தான் மட்டும் உலகச் சந்தை பூராவையும் வைத்துக்கொள்ள வேண்டுமென்றுகூட ஆசைப் படுகிறது. இதன் பயன் என்ன? மிதமிஞ்சிய உற்பத்தி, பொருளாதாரச் சீர்கேடு, வேலையில்லாத் தொல்லை,

கம்யூனிஸ்டுகளும் முதலாளித்துவத்தைக் கண்டிக்கிறார்கள். காந்திய வாதிகளும் முதலாளித்துவத் தீமைகளைத் தாக்குகிறார்கள். 'கிராமந்துவம்' என்று ஸ்ரீ, பரதன் குமரப்பா எழுதியுள்ள ஒரு நூல், 'சக்தி காரியாலய'ப் பிரசுரமாக வெளி வருகிறது. மொழிபெயர்த்தவர் ஸ்ரீ சுப, நாராயணன். அதில் உள்ள ஓர் அத்தியாயம் இந்தக் கட்டுரை.

Page missing 37-44

போர், ரத்தக்களரி இவைதான். இவற்றைத் தடுக்க முடியாது.

(1) தன்னலம்:— தனக்குத் தானே செல்வத்தைச் சேர்த்துக் கொள்வதுதான் பொருளாதாரத் திட்டத்தின் ஒரே நோக்கம் என்கிற கருத்தை அடிப்படையாகக் கொண்டே முதலாளித்துவம் எழுந்தது. பொருளாதார முயற்சி மட்டும் என் இப்படிக் கீழ் நிலையை அடைந்தது என்பது எளிதில் விளங்கவில்லை. ஏனென்றால், வேறு எந்தத் துறையிலும் பணம் சம்பாதிப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டிருக்கிற மனிதனை நாம் மதிப்பதில்லை. பணம் ஒன்றுக்காகவே தன் வேலையைச் செய்கிற ஒரு மருத்துவன், ஆட்சியாளன், அல்லது ஆசிரியனை நாம் மதிப்பது அபூர்வம். இதனால்தான் போலும், மேலை நாடாயினும் சரி, கீழை நாடாயினும் சரி, வியாபார வகுப்பார்களைக் குறைவாகவே மதிக்கிறார்கள். இவர்களைவிடக் குருமார், வைத்தியர், ஆசிரியர், போர்வீரர் ஆகியோர்களை அதிகமாக மதிக்கிறார்கள். இவர்களிடத்திலே ஓரளவு தன்னலத் தியாகமோ, கண்ணியமான நோக்கமோ இருப்பதாக வைத்துக் கொள்ளுகிறோம். தன்னுடைய சொந்த லாபத்தைத் தவிர வியாபாரி வேறொன்றையும் லட்சியம் செய்யமாட்டான் என்று நினைக்கிறோம். இது இப்படித்தான் இருக்குமென்றில்லை. இப்படியே இருந்தபோதிலும், குரு, சிப்பாய் இவர்களைப் போலவே, வியாபாரியும் சமூகத்துக்கு முக்கியமாய் வேண்டியவன்தான். ஆகவே, ஓரளவுக்குத் தொண்டு செய்யும் நோக்கத்தால் தன்னுடைய தொழிலை வியாபாரி கட்டுப்படுத்தி வந்தானானால், அவனுடைய வேலையும் கண்ணியம் நிறைந்ததாக ஆக முடியவே முடியும். ஆனால், அப்படி ஆவதில்லை. வியாபாரத்தையும் தொழிலையும் முதலாளித்துவமானது கடைசிப் படி வரைக்கும் இறக்கித் தள்ளி விட்டது. எப்படி? சொந்த லாபம் அடைவதில் உள்ள ஆசை எந்த மட்டுக்குத்தான் போகலாம் என்பதிலே அது வரம்பு முறையில்லாமல் செய்து விட்டது; எல்லையற்ற வசதி தந்து விட்டது. யார் யாரால் தனக்கென்று செல்வம் திரட்டிக் கொள்ள முடிந்தாலும் சரி, சர்வ சுதந்தரத்துடனும் அவர் அப்படியே செய்யலாம். தனி நபர் சுதந்தரத்திலே தலையிடுவதில்லையென்ற சாக்கை வைத்துக்கொண்டு, தன்னலத்துக்கும் பேராசைக்கும் அது பூரா வழியையும் திறந்து விட்டு விட்டது. இந்தத் திட்டத்தின் கீழே வாழுகிற எல்லோருமே தன்னலக்காரராகி, தமக்கென்று வேண்டிய மட்டும் பற்றிச் சுருட்டிக் கொள்ளாமல் வேறென்ன செய்வார்கள்? இது இயல்பு தானே!

(2) கொள்ளை:—தனி நபர்களிடையே, ஒருவனுக்கு நியாயப்படி சேர வேண்டியதை இன்னொருவன் தனக்கென்று வைத்துக் கொண்டால், அவனைத் திருடன் என்கிறோம். ஆனால், முதலாளித்துவ முறையின் கீழே நடப்பதுபோல், அதன் அமைப்பு முறைப்படி நடந்தால், அப்படிச் செய்கிறவனைச் சமூகத்தின் கௌரவமான உறுப்பினனாகவே மதித்து விடுகிறோம். இவன் செய்கிற குற்றம், பல மடங்கு அதிக மோசமானது என்பதைக் கவனிப்பதில்லை. இவன், எண்ணற்ற மக்களுக்குச் சொந்தமானதை,

வேண்டு மென்றே திட்டம் போட்டு, நிதானமாய் நம்பிக்கை மோசம் செய்கிறான். நியாயப் படி பார்த்தால், தொழிலின் லாபத்தை ஏறத்தாழச் சமமாகப் பிரித்து, அதில் ஈடுபட்டுள்ள அனைவருக்கும் — பொருளாளர், தரகு வியாபாரிகள் (ஆந்த்ரெபுரொனர்: சொந்த முதல் போடாமல், மற்றவர்களுடைய தொழில்களை நிர்வகித்துத் தரகு லாபம் பெறுகிறவர்கள்—மானேஜிங் ஏஜெண்டுகள்,) கூலி யாட்கள் இவர்களிடையே—பகிர்ந்தளித்து விட வேண்டும். ஆனால், தொழிலாளிகள் வாய்க்கும் கைக்கும் போராடி வாழும்போது, பொருளாளரும் தரகர்களும் கொழுத்துக் கொண்டு வந்தால், இதன் அர்த்தம் என்ன? தமக்குச் சேர வேண்டியதைவிட அதிகமாகவே இவர்கள் பெறுகிறார்கள் என்று தானே ஆகிறது. சும்மா தூங்குகிற தன் பணத்தை முதலாளி தொழிலில் போடுகிறான். உற்பத்தி வேலையில், தன்னுடைய சிறு விரலை நிமிர்த்தி அசைக்கிற சிரமங்கூட எடுத்துக் கொள்ளாத இவன், பெரும் பணத்தை லாபமாக அடைகிறான். நாள் தவறாமல், இரவு பகலாய், நெற்றி வியர்வை நிலத்தில்விழ உழைக்கிற தொழிலாளிக்கு வருமானத்திலிருந்து கொடுக்கும் பங்கு மகா பிச்சைக்காரத் தனமானது. இந்த முறையில், முதலாளித்துவம் மிக்க நியாயமற்றது. இதைக் கொள்ளை, சூறை என்று சொல்லாமல், வேறு என்ன என்று சொல்வது? ஐரோப்பாவிலே, இது பண்ணை அடிமை முறையின் நேர் வாரிசாக உண்டாயிற்று. இதன் கீழே பலம் படைத்திருந்த கொள்ளைக்காரப் பிரபுக்கள், தங்கள் கோட்டைகளிலிருந்து வெளிக் கிளம்பி, அண்டையிலிருந்த சிற்றூர்களைச் சூறையாடி, தேய்ந்துபோன தம்முடைய செல்வ நிலையைச் சீராக்கிப் பெருக்கிக் கொண்டார்கள். தம்முடைய தாக்குதலினின்று தப்பவேண்டுமானால், கிராம ஜனங்கள் தமக்குக் கப்பம் கட்டிவர வேண்டுமென்று கட்டாயப் படுத்தி வந்தார்கள். ஐரோப்பாவிலே, யந்திர உபயோகத்துடன் கைத்தொழில் புரட்சியும் சேர்ந்து ஏற்பட்டு, அதே சமயத்திலே, இந்தியாவிலிருந்து பதுக்கல் பொருள்கள் ஏராளமாக வெளிக்கொணரப்பட்டு, ஐரோப்பாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டவுடனே, இந்தப் பண்ணை அடிமைப் பிரபுக்கள் ஒழிந்துபோய், இவர்கள் ஸ்தானத்தில் பணங் கொடுத்து வாங்குகிறவர்கள் வந்து அமர்ந்து கொண்டுவிட்டார்கள். இவர்கள், பல அம்சங்களில் பண்ணை அடிமை முறையை ஒத்திருக்கிற ஒரு ஸ்தாபன அமைப்பை உண்டாக்கி வைத்தார்கள். இதன் மூலம், முந்திப் பண்ணை அடிமைப் பிரபுக்கள் கப்பம் வசூலித்து வந்த மாதிரியே, இவர்களும் லாபத்தை வசூல் செய்து வருவது சாத்தியமாயிற்று. நடைமுறை மட்டும் என்னவோ, முன்போல் கொள்ளையிடும் ரீதியிலேதான் இருந்து வந்தது. செல்வத்தினால் தமக்குக் கிடைத்த அதிகார சக்தியின் காரணமாகத் தமக்கு நியாயமாய்ச் சேரவேண்டியில்லாததையெல்லாம் அவர்கள் தம்முடையதாக எண்ணிப் பற்றிக்கொண்டு விட்டார்கள்.

(3) உள்ளுக்குள்ளே போராட்டம்:—ஆனால், எப்பொழுதுமே தங்கு தடையின்றிச் சுரண்டிக் கொண்டு போவது என்பது முடியாது. விஷயம் தெரியாமல்,

ஏழையாய் அமைப்பு முறையற்றிருக்கும் வரையில் தொழிலாளி பணிந்து போவான். ஆனால், முதலாளி மனம் வந்து என்ன கொடுத்தாலும் அதை வணக்கமாய் அவன் ஏற்றுக் கொள்ளத் தயாராய் இராத ஒரு காலம் விரைந்து வந்து விடுகிறது. தன் உரிமையை வலியுறுத்தத் தொடங்கி விடுகிறான்; கைத்தொழில் உலகம் கருத்து மாறுபாட்டாலும், கொந்தளிப்பாலும் நாலாபுறமும் திசைமாறி இழுத்துக்கொண்டு மல்லிடுகிறது. மக்களின் வலிமைபெற்ற இரு பிரிவுகளிடையே-மூலதனத்துக்கும் உழைப்புக்குமிடையே-போராட்டம் வளர்ந்து பெருகி விடுகிறது. முதலாளித்துவத்தின் கீழ் இதைச் சமாதானமான முறையில் சரிப்படுத்துவதற்கு ஏது இருப்பதாகத் தெரியவில்லை.

(4) ஏகாதிபத்தியம்:-தன் நாட்டிலே சுரண்டுவதுடன் மட்டும் முதலாளி நின்று விடுவதில்லை. தாய்ப் பொருள்களை மலிவாகப் பெறுவதற்கும், தன்னுடைய பண்டங்களை உடனுக்குடன் விற்பதற்குச் சந்தைகளைப் பிடிப்பதற்கும், உலகத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடிவரைக்கும், அவன் தன்னுடைய பேராசைக் கண்ணைச் செலுத்தி நோட்டம் பார்க்கிறான். இதன் பயனாக, வெவ்வேறு சாக்குப் போக்குச் சொல்லி, உலகத்தின் பெரும் பகுதிகளைத் தன் வசமாக்கிக் கொள்கிறான். இல்லாவிட்டால், பெரும் பணத்தை உபயோகித்து, அந்தந்த இடங்களையோ, அரசாங்கங்களையோ தன்னுடைய ஆதிக்கத்துக்குள் கொண்டுவந்து விடுகிறான். அவனுடைய தொழிற்சாலைகளுக்கு வேண்டிய தாய்ப் பொருள்களை அவை மலிவாக அவனுக்கு வழங்குகின்றன என்று கண்டுகொள்ளுகிறான். அவை சொந்தமாகப் பண்டங்களைச் செய்து முடிக்காதபடி அவன் தடுக்கிறான். இல்லாவிட்டால், அவனுடைய சரக்கை வாங்கக்கூடிய சந்தை அவனுக்கு இல்லாமல் போய்விடுமல்லவா? இவ்வாறாக, முதலாளித்துவத்தால் ஏகாதிபத்தியமும், பலம் குன்றிய மக்களை அடிமைப்படுத்துகிற கொடுமையும் வந்தே தீருகின்றன. இந்த நடைமுறையில் ஒழுக்க சம்பந்தமான கவலைகளுக்கு இடமில்லை. அப்படி இருப்பதாகச் சொன்னாலும், அது வெறும் முலாம் பூசுகிற பேச்சுத்தான். லாபம் ஒன்றுதான் குறி.

(5) புரட்சி:—ஆனாலும், மீண்டும் சுரண்டலை எதிர்க்கவே செய்வார்கள். அடிமைப்பட்ட தேசிய இனங்கள் புரட்சி செய்து எழும்புகின்றன. அன்னியனுக்காகத் தம்முடைய ரத்தத்தை வறண்டு போகும்படி அடிப்பதற்கு அவர்கள் சம்மதிக்க மறுக்கிறார்கள். குறுகிய தேசிய வெறி பிறந்துவிடுகிறது. வெறுப்புக்காளான அன்னியனை நாட்டை விட்டு விரட்டி ஓட்டி, ஏகாதிபத்தியத்துக்கு இறுதி கட்டிவிடுவது தான் இதன் ஒரே நோக்கம்.

(6) போர்:—இது மட்டுமா? ஏகாதிபத்தியம் என்பது தொழில் மயமான ஒரு தேசத்தின் வேட்டை நிலமாயிருப்பதால், தாங்களும் தொழில் மயமாவதில் வெற்றி பெற்றுவிட்ட இதர நாடுகள் இதைப் பொறாமையோடு நோக்குகின்றன. இதன் தாய்ப் பொருள் வசதிகள், சந்தைகள், மலிவான கூலி, பணத்தைப் பத்திரமாக அடைத்து வைக்க உள்ள வசதிகள், ஆகியவற்றைத் தாமும் அடைந்து விட

ஆவலுறுகின்றன. இந்தச் செளகரியங்களில் தமக்கும் கொஞ்சம் வேண்டுமென்று அவை ஆசைப்படுகின்றன. விளைவு என்ன? உலகப் போர்தான். தொழில் மயமாகிவிட்ட நாடுகள், கட்சி கட்டிக்கொண்டு, பலம் குன்றிய நாடுகளை யார் ஆளுவது என்பதைப் பற்றிச் சண்டைபோடத் தொடங்கி விடுகின்றன. முதலாளித்துவத் தொழில் முயற்சியால் சாத்தியமாகி விட்ட வசதிகள் அனைத்தையும் சண்டையில் ஈடுபடுத்துகிறார்கள். இரு தரப்பினரும் மிகப் பெருமிதமான கோஷங்களை ஒலிக்கின்றார்கள். சுதந்தரத்துக்கும், சுபிட்சத்துக்கும் வழி கோலுகிற புது முறையை அமைப்பதற்காகவே போர் நடக்கிறதாகப் பாவனை செய்கிறார்கள். இல்லாவிட்டால், ஜனநாயகத்தைக் காத்து ரட்சிக்கவே சண்டையிடுகிறோம் என்கிறார்கள். இதன் மூலம் மக்களை ஏமாற்றித் தம்முடன் சேர்த்துக் கொள்ளலாம் என்று அவர்கள் நம்புகிறார்கள். வாழ்க்கை பூராவும் அடிமைப்பட்டு உழைத்து வந்த துரதிர்ஷ்டம் பிடித்த தொழிலாளிக்கு உயர்ந்த லட்சியங்களின் மூலம் போதை ஏற்றுகிறார்கள். தன் எஜமானனுடைய பேராசையைத் தீர்ப்பதற்காக, அவன் குண்டு முனையில் மடியத் தயாராகிவிடுகிறான். ரத்தம் எவ்வளவுதான் வெள்ளமாய்ப் புரண்டோடினாலும் சரி, முதலாளிக்கு அவனுடைய பணம் சேர்ந்தாக வேண்டும். இப்படி, உலகப் போர்களிலிருந்து மேலும் மேலும் உலகப் போர்கள் எழும்பிய வண்ணமிருக்கின்றன. வரவர இவை வெகு தீவிரமாகி, ஒரேயடியாய் மக்களையும் நாகரிகத்தையும் பூண்டில்லாமல் துடைத்தெடுத்துவிட முனைகின்றன. முதலாளித்துவத்துக்கு ஏதாவது தீவிரமான எதிர்மாற்றுச் செய்தாக வேண்டும். இல்லாவிட்டால், இதன் மூலம் மனித சமுதாயமானது அறவே நாசமாக்கப்பட்டுப் போய்விடலாம்.

கட்டுப்பாடற்ற தன்னலம் இருக்க விட்டுவைப்பதைப்போல் பொருளாதார முறைக்குக் கேடு சூழத் தக்கது வேறொன்றுமில்லை என்பது தெளிவு. என்? இதன் மூலம் காட்டாட்சிச் சட்டந்தான் வந்து சேரும். அது மட்டுமா? நிலைமை அதைவிட மோசமாகிவிடும். பகவத் கீதையில் என்ன சொல்லி இருக்கிறது? அந்தப் பாஷையிலேயேசொல்லுவதானல், இது பேய்களின் உலகத்தைச் சிருஷ்டிப்பதே யாகும். இப்படிப்பட்ட உலகத்திலே, பேராசைக்கு அடிமைப் பட்டு, மனிதர்கள் மிருகங்களைவிடக் கீழ்க் கடைக்குப் போய்விடுகிறார்கள். மோசடி செய்வது, ஏமாற்றுவது, மனிதத் தன்மையற்ற கொடுமைகள் புரிவது, உலகம் பூராவையுமே சுரண்டிப் பிழைப்பது, நாசவேலை செய்வது ஆகியவற்றில் மனிதர்கள் நான் முந்தி நீ முந்தி என்று போட்டியிடத் தொடங்குகிறார்கள்.



### ஏன் தேறவில்லை ?

ஸெர்வீஸ் கமிஷன் பரிட்சையில் தேறத்தவறிய ஒருவன் சொன்ன காரணமாவது: "நோயால் என் பல்லெல்லாம் விழுந்து போயிற்று. பொய்ப் பல் கட்டிக்கொண்டிருக்கிறேன். கேள்விகளைப் படிக்க முடியவில்லை."

# என் குளிக்க வேண்டும்?

டாக்டர்.
ரசிக் பெகிர்லால்

கேள்வி: குளிப்பது என்றல் என்ன?

பதில்: குளிப்பது என்றல், உடம்பு பூராவையுமோ அதன் ஒரு பகுதியையோ நீருக்குள் அமிழ்த்துவதே.

கே: ஒவ்வொருவருடைய தினசரி வாழ்க்கையிலும், சமயச் சடங்குகளிலும், குளிப்பது ஒரு முக்கியமான பகுதி என்று ஏன் இந்து சாஸ்திரங்கள் கூறுகின்றன?

ப: நல்ல சுகத்தோடும், குளிர்ச்சியான மூளையோடும் இருப்பதற்கு ஒவ்வொருவரும் குளிக்க வேண்டியது மிக மிக அவசியம். அதனல்தான், கிரகஸ்தனனலும் சரி, ஞானியானலும் சரி, ஒவ்வொருவருக்கும் இவை இரண்டும் அவசியம். தேக சுகமில்லாத வாழ்க்கை உபயோகமற்றது. அதனல், நம்முடைய முன்னேர்கள் இதைச் சமயத்தின் ஒரு பகுதியாக ஆக்கினர்கள். அதிகாலையில், வழிபாடு செய்யுமுன், அன்றைய அலுவல்களைச் செய்யப் புகுமுன், குளிக்க வேண்டுமென்று அவர்கள் விதித்தார்கள்.

யோகாப்பியாசப் பற்றுடைய சில நண்பர்கள், குளிக்கவே தேவையில்லை என்று சொல்லுகிருர்கள். இருக்கலாம். அவர்களுக்குப் பூலோகமே தேவையில்லை. ஆனல், நம்மைப் போன்ற சாமான்யர்களுக்கு, பேருதவி செய்வது ஸ்நானம். அதன் அவசியத்தையும் முறையையும் பற்றி, வெல்த் அண்ட் வெல்பேர் பத்திரிகையில் வெளிவந்துள்ளது இந்தக் கட்டுரை.

கே: உடல் நலத்துக்குக் குளிப்பது ஏன் இவ்வளவு அவசியமாகிறது?

ப: நம்முடைய உடம்பு ஓய்வு ஒழிவின்றி இயங்கிய வண்ணமிருக்கிறது. ஏன் தெரியுமா? உள்ளுறுப்பும் வெளியுறுப்பும், உணவை உட்கொள்ளுவதிலும், பிறகு எஞ்சிய கழிவுப் பொருள்களை வெளியேற்றுவதிலும் இயங்கிக் கொண்டேயிருக்கின்றன. அதனல்தான், இந்தக் கழிவுப் பொருள்களை வெவ்வேறு வழிகளில் உடம்பை விட்டு அப்புறப் படுத்துகிறேம். அதன் ஒரு பகுதி நம்முடைய சருமத்தின் அடியில் அமைந்துள்ள பல நாளங்களால் வெளியேற்றப் படுகிறது. நாளங்களிலிருந்து சருமத்தின் மயிர்க்கால் வழியே ஒருவிதத் திராவகம் கசிகிறது. சாதாரணமாக இதை வியர்வை என்கிறேம். வியர்வையிலுள்ள நீர்ப் பகுதி ஆவிவடிவில் வெளியேறிவிடுகிறது. அழுக்குப் பகுதி மயிர்க் கண்களில் படிகிறது. காற்றில் மிதக்கும் தூசுத் துணுக்குகளும் அழுக்கோடு சேர்ந்து படிகின்றன. இவை ஒன்று சேர்ந்து, வியர்வை வெளியேறமுடியாதபடி மயிர்த் துவாரங்களை அடைத்துக் கொள்ளுகின்றன. அதனல், வியர்வைக்கும் நாளங்கள் செயலாற்ற முடிவதில்லை. இதனல் பல விதச் சரும நோய்கள் உண்டாகின்றன. உள்ளுறுப்பின் வேலை தடைப் படுகிறது.

கே: குளிப்பதனல் என்ன நன்மை?

ப: (1) உடம்பு சுத்தமாயிருக்கிறது. (2) சரும நோயும் பிற நோயும் நம்மை அணுகமாட்டா. (3) தசை நார்கள் நெருங்கிச் சேர்கின்றன. இதனால் மேனி திளைக்கிறது. (4) மூளை குளிர்ச்சி யடைந்து புத்துணர்ச்சி பெறுகிறது. (5) பார்வை பலப்படுகிறது. (6) செரிமானம் சல்லிசுப் படுகிறது. பசி அதிகரிக்கிறது. எப்படி? உள்ளுறுப்புக்களில் மிகுதியான ரத்தம் பாய்வதனால்.

கே: எப்போது குளிக்க வேண்டும்?

ப: (1) அதிகாலைதான் மிகப் பொருத்தமான நேரம். ஏன் தெரியுமா? இரவு ஓய்வு பெற்ற பிறகு குளிப்பதால் உடம்புக்கு ஆக்கம் வருகிறது. அன்றைய வேலைக்கு மூளையை ஊக்குவிக்கிறது. (2) பகலில் சாப்பாட்டுக்கு முந்திக் குளித்தால் நல்ல பசி வரும்.

கே: எப்போது குளிக்கக் கூடாது?

ப. உணவுக்குப் பின்னர் குளித்தால், அஜீர்ணம் உண்டாகும். (2) பாரிசப் பிடிப்புள்ளவர்கள், மூச்சுப் பை நோயுள்ளவர்கள் இவர்களும், அஜீர்ண பேதி, ரத்தபேதி, சில மாதிரியான கண், காது நோயுள்ளவர்களும் குளிக்கக் கூடாது. (3) கலவிக்குப் பின் குளிக்கக் கூடாது.

கே: குளிப்பதில் எத்தனை வகை உண்டு?

ப: சாதாரணமாக இவற்றைச் சொல்லலாம்: (1) வெந்நீர் முழுக்கு. (2) தண்ணீர் முழுக்கு. (3) துருக்கி முழுக்கு [வெந்நீர் ஆவி உடம்பில்பட அமர்ந்திருப்பது.] வைத்திய முறையில் பலவித முழுக்குகளும் உண்டு.

கே: இவற்றின் நன்மை, தீமை யாவை?

ப: (1) வெந்நீர் முழுக்கு:— மென்மையான தேகிகளும், நோயிலிருந்து தேறியவர்களும், முதியவர்களும் வெந்நீரில் முழுகுவது நல்லது. இது தேகத்தைத் திளைக்கச் செய்கிறது. சோர்வையும் களைப்பையும் குறைக்கிறது. சருமத்தை மென்மையாக்குகிறது. தேஜஸ் உண்டாக்குகிறது. ஆனால், வெந்நீரைத் தலைமேல் ஊற்றிக்கொள்ளக் கூடாது. அப்படிச் செய்வதால், பார்வைக்குக் கேடு சூழும். எப்போதும் மூடின அறையிலேதான் வெந்நீரில் குளிக்கவேண்டும். குளித்த பிறகு சருமத்தை நன்றாய்த் துவட்டிவிட்டு, ஸ்நான அறையைவிட்டுப் போகு முந்தி உடை உடுத்துக் கொண்டுவிட வேண்டும். பிறகு, சூடாகக் கொஞ்சம் பாலோ, தேயிலையோ பருகுவது நல்லது. மேலே சொன்ன மாதிரி முன்னெச்சரிக்கையாயிராமல் போய்விட்டால், அநேக சமயம் தடிமன் பிடித்துக் கொள்ளலாம். (2) தண்ணீர் முழுக்கு:—எப்போதுமே இது சுறுசுறுப்புத் தருவது. செரிக்கச் செய்யும். மேலே சொன்ன எச்சரிக்கை இதற்குத் தேவையில்லை. தண்ணீரில் முழுகுகிறவர்களால் மற்றவர்களைவிடத் தட்ப வெப்ப மாறுதல்களை நன்றாய்ச் சமாளித்துக்கொள்ள முடியும். பலவீனர்களுக்கு இது தீமை செய்யும். நெடுநேரம் குளிர் நீரில் குளிக்கக் கூடாது. குளிர்ச்சி கண்டதுமே நிறுத்திக் கொள்ளவேண்

டும். (அ) ஆற்று முழுக்கு: உடம்பைக் கிளர்ந்து திளைக்கப் பண்ணும். நீந்துவது மிகவும் நல்லது. மடமடவென்று நீர் விரைந்தோடுவது நல்லது. (ஆ) கடல் முழுக்கு: பலவீனர்களுக்கு இது ஒத்துக் கொள்ளும். வெப்பநிலை மாறுமல் ஒரே நிதானமாயிருக்கிறதல்லவா? அதனல். (3) துருக்கி முழுக்கு: உணர்ச்சி ஊட்டும். பல நோய்க்குப் பலன் தரும்.

கே: குளிக்கும்போது சவுக்காரம் உபயோகிக்க வேண்டுமா?

ப: சருமத்தில் மேல்பாகத்தில் உள்ள அழுக்கைப் போக்கச் சவுக்காரம் உதவும். ஆனல், அது தோலைச் சொறசொறப்பாக்கி விடுகிறது. முரட்டுத் துணியால் உடம்பை நன்ருய்த் தேய்த்து விட்டால், சவுக்காரம் வேண்டியதில்லை.

கே: குளிக்கும்போது எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டுமா?

ப: குளிக்கும் போதோ, அதற்கு முந்தியோ எண்ணெய் தேய்த்துக் கொண்டால், சருமம் பிசுபிசுப் படையும், மிருதுத் தன்மை பெறும், தேஜஸ் உண்டாகும். சரும நோய்கள் அவ்வளவு அதிகம் வரமாட்டா. என் கருத்து என்ன தெரியுமா? உடம்பை நன்ருய்த் துப்புரவு செய்து கொள்ள வேண்டும். அப்புறம் உடம்பு பூராவும் எண்ணெயைத் தேய்க்க வேண்டும். மிச்சம், மீதியை நீரைக்கொண்டு [சீயக் காயோ, சவுக்காரமோ உபயோகிப்பது தென்னுட்டவர் வழக்கம்.—ஆசிரியர்: சக்தி.] கழுவிவிட்டு, உலர்ந்த துண்டால் துவட்டிவிட வேண்டும்.

கே: குளிப்பதற்கும் உடற்பயிற்சிக்கும் எத்தகைய தொடர்பு உண்டு?

ப: சாதாரணமாய், குளித்த பிறகு உடற்பயிற்சி செய்ய வேண்டும். ஆனல், பயிற்சி செய்த உடனே உடம்பு சூடு மாருமலிருக்கும்போதே, குளிக்கிற பழக்கமுள்ளவர்கள் எப்படிப்பட்ட தட்ப வெப்ப மாறுதலையும் தாங்குவார்கள். இவர்களைத் தடிமனே, சுவாச சம்பந்தமான வேறு கோளாறுகளோ அணுகுவதில்லை. இளைப்பு நோய் உள்ளவர்களுக்கு இந்த முறை நல்லது.

கே: பாதி உடம்பு குளிப்பதும், உடம்பின் சிற்சில பகுதிகளை மட்டும் குளிப்பாட்டுவதும் எப்படி?

ப: உடம்பின் சில பாகங்களை மட்டும் முழுக்காட்டுவதும், முகம், கை, கால்களைத் தினமும் பலமுறை கழுவுவதும் மூளைக்கும் உடம்புக்கும் மிக்க உபயோகமானவை. இவற்ருேடு எப்படிப்பட்ட உணவை உட்கொள்ளு முன்னரும் கையலம்பிக்கொள்ள வேண்டும். தூசு படிந்த இடத்தில் இருந்து விட்டு வந்த பிறகு, ஒவ்வொரு சமயமும் முகத்தை அலம்பிக் கொள்ள வேண்டும். கண்ணை அடிக்கடி கழுவுவதால் பார்வை தெளிவாகும். இதனல் கண்நோய்கள் வருவதைத் தடுக்க முடியும்.



கவிஞன் மதிப்பு: சரித்திரத்திலேறிய கவிஞன் தெய்வம். அடுத்த அறையில் உள்ள கவிஞன் பைத்தியம்.

—மாக்ஸ் ஈஸ்ட்மான்.

# நிபுணன்

எம். குன்னேஸ்வரன்

பரமசிவன் என்னுடன் பல வருஷங்களாக நெருங்கிப் பழகும் நண்பன். இருந்தாலும், அவனுடைய ஒரு முக்கியமான குறையை என்னால் நிவர்த்திக்க முடியவில்லை. அதாவது அவனுடைய தலை வழுக்கை விழுந்து கோழித்தலை மாதிரி இருந்தது. சீப்புக்கும், பிரஷ்ஷுக்கும் அவசியமில்லை; என்றாலும், அவன் இந்த வழுக்கையை நீக்கிக் கொள்ள எவ்வளவோ பணம் செலவழித்தான். ஆனால், அவனுடைய பணச் செலவும், காலச் செலவும் ஒரு பயனையும் அளிக்கவில்லை. எப்படியாவது இந்த வழுக்கையை நிவர்த்தித்துக் கொள்ள உதவும்படி, என்னையும் வேண்டினான். பத்திரிகைகளில் விளம்பரப் படுத்தப்படும் ஒவ்வொரு மருந்தையும் வாங்கி உபயோகித்துப் பார்த்தான். அதிலும் பயனில்லை. உத்தியோகங் கிடைக்காத எனக்கு, பத்திரிகைகளில் வரும் 'தேவை' விளம்பரத்தைப் பார்ப்பதில் ரொம்பவும் சிரத்தை! ஆனால், என்னுடைய நண்பனின் பிரச்னையும் முக்கியம்தானே? அன்று காலை உள்ளூர்த் தினசரிப் பத்திரிகையில் வந்த ஒரு புதிய விளம்பரத்தைப் பார்த்தேன். முதலில் இதை அவனிடம் சொல்ல வேண்டும் என்று எண்ணினேன். என்ன இருந்தாலும் அத்தியந்த நண்பனல்லவா அவன்?

*அணுக்குண்டா யிருந்தால் என்ன? இன்னொன்றாயிருந்தாலென்ன? எல்லா அதிசயங்களும், நிபுணர்களுடைய அபார ஆராய்ச்சிகளின் விளைவேயாகும். அணு ஆராய்ச்சி உலகையே அழிப்பதாய்ப் பயமுறுத்தும் அணுக்குண்டிலே முடிந்திருக்கிறது. 'மைனிந்தியா'விலுள்ள இந்தக் கதையில் காணும் நிபுணரின் ரோம ஆராய்ச்சியோ...? அதுவும் ஒரு விபரீத முடிவுதான். கேட்கவா வேண்டும்.*

அவனுடைய ஆபீசுக்கு உடனே சென்று இந்தப் புதிய மருந்தைச் சொன்னேன். அவனுக்கோ சந்தோஷம் தாங்கவில்லை. ஆகவே, இந்த விளம்பரத்தைச் செய்த டாக்டரிடம் இருவரும் செல்வதென்று முடிவு செய்தோம்.

மறுநாள் அப்படியே அந்த டாக்டர் வீட்டை அடைந்தோம். டாக்டர் டி. வி. ஈசன்; 'தலைமயிர் நிபுணர்' என்ற எழுத்துக்களுடன் ஓர் அழகான விளம்பரப் பலகை, வீட்டு வாசலில் தொங்கியது.

நாங்கள், அறைக்குள் நுழைந்ததும், கட்டை குட்டையான உருவமும், புதர்போன்ற தலைமயிரும் படைத்து, கனமான மூக்குக் கண்ணாடி அணிந்திருந்த அந்த டாக்டர் விஞ்ஞான மேதையான ஈன்ஸ்டினைப்போல் காட்சியளித்தார்! அவர் எங்கள் எதிரே வந்ததும், இங்கிலீஷ் முறைப்படி வணங்கினோம். அவரும் சந்தோஷமாய் வரவேற்றார். பிறகு என்னுடைய நண்பனின் குறையையும், அவனுடைய விரயமான முயற்சிகளையும் நான் விளக்கிச் சொன்னேன்.

“அப்படியா! ஆகவே நீங்கள் வழுக்கை நீக்கும் மருந்துக்காக வந்திர்களாக்கும். நல்லது!” என்றார் டாக்டர்.

நான் அந்த மருந்து இன்ன தென்று சொல்லும்படி அவரைக் கேட்டேன்.

"விலை அதிகமாகுமே!" என்றார் அவர்.

"நீங்கள் பரமசிவத்தின் தலை மயிரைச் சீப்பு உபயோகிக்கும் அளவுக்கு வளரச் செய்துவிட்டால் போதும். அதற்கு எவ்வளவு செலவானாலும் அக்கரையில்லை." என்று வக்கீல் மாதிரி அவனுக்காகப் பரிந்து பேசினேன்.

"அப்படியானால், அதற்கு ஐந்நூறு ரூபாயாகும். ஆனால், பலன் மாத்திரம் நிச்சயம் என்று உறுதிமொழி கொடுக்கிறேன்."

"ரொம்ப சரி. நீங்கள் அப்படி உறுதிமொழி கொடுப்பதாயிருந்தால் நாங்கள் அந்தத் தொகையைத் தர ஆட்சேபமில்லை."

நாங்கள் இப்படிப் பேசித் தீர்மானித்துக் கொண்டதும், டாக்டர் எங்களைப் பக்கத்திலிருந்த ஓர் அறைக்கு அழைத்துச் சென்றார். அந்த அறை ஆப்பரேஷன் செய்யும் இடம் மாதிரியிருந்தது. இருந்தாற்போலிருந்து, டாக்டர் "நான் தலை மயிர் பயிராகும் ஒருவித விதையைக் கண்டுபிடித்திருக்கிறேன்" என்றார். நாங்கள் பிரமித்துப் போனோம்.

"நீங்கள் ஏன் பிரமித்து விட்டீர்கள்? எனக்கு ஏதாவது பைத்தியமா என்று நீங்கள் நினைக்கிறீர்களா? இதோ பாருங்கள். இவைகள் மற்ற விதைகளைப் போலவே தோன்றுகின்றன அல்லவா? உண்மையில் இவைகள் மயிர்த்துவாரங்களிலிருந்து உண்டாக்கப்பட்டவை. ஆப்பரேஷனும் பிரமாதமில்லை. வலியே இருக்காது. இன்னும் பதினாறே நாட்களில் உங்கள் தலையில் நிறைய மயிர் வளரும். அதற்கு நான் உத்திரவாதம். இது உங்களுக்கு ரொம்பவும் ஆச்சரியமாயிருக்கிறதல்லவா?" என்று டாக்டர் விளக்கினார்.

பரமசிவன் இதுவரை எத்தனையோ விதமான மருந்துகளைப் பரீட்சை செய்து பார்த்தவனானாலும், இந்த ஆச்சரியகரமான மருந்தில் மிகவும் கவர்ச்சி கொண்டான். ஆப்பரேஷன் நாற்காலியில் அவன் உட்கார்ந்து கொண்டதும், டாக்டர் தமது வேலையைத் தொடங்கினார். பரமசிவனின் வழுக்கை மண்டையில், அந்த விதைகளின் சத்துச் செலுத்தப்பட்டது.

பணத்தை டாக்டரிடம் கொடுத்ததும், உத்திரவாதத்துடன் கூடிய அச்சடித்த ரசீது ஒன்றை அவர் கொடுத்தார். பரமசிவனுக்கு நம்பிக்கையும், சந்தோஷமும் அபரிமிதமாய் உண்டாயின.

அன்று ஞாயிற்றுக்கிழமை. நான் சாவகாசமாகப் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தேன். சரியாக மணி ஒன்பதரை ஆனபோது, சிவன் கவலை தேங்கிய முகத்துடன் வந்து சேர்ந்தான். அவன் சௌக்கியத்தை விசாரித்தேன்.

"என்னவோ போ!" என்று சொல்லிக் கொண்டே ஈஸிச் சேரில் சாய்ந்து சிகரெட்டை ஊதி, அதன் புகை சுருள் சுருளாய்ப் பரவுவதை அனுபவித்தவனாய், "என் சௌக்கியம் தானே... இதோ பார்! பார்!" என்று சொல்லித் தொப்பியைக்

கையிலெடுத்தான். கறுத் தடர்ந்து வளர்ந்திருந்த அவனுடைய தலை மயிர்த்திரளைக் கண்டு நான் பிரமித்துவிட்டேன். அந்த மயிர்கள் படிந்திராமல் முகத்தில் விழுந்து தொங்கின.

"பலே பேஷ்! சிகிச்சையால் அபூர்வமான பலன் ஏற்பட்டிருக்கிறதே. ஆனால், நீ ஏன் மயிர் வெட்டிக் கொள்ளவில்லை? இன்று காலையிலே அதைச் செய்திருக்கலாமே?" என்றேன்.

சிவனுக்கு இதனால் கவலை நீங்கவில்லை. திடீரென்று அவன் இரைந்த குரலில் "எல்லாம் பார்த்தாகிவிட்டது. மனித யத்தனத்தில் எவ்வளவு முடியுமோ அவ்வளவும் செய்தேன். ஒரு நாளைக்கு மூன்று முறை கூடக் கத்திரித்துப் பார்த்தேன். ஆனால், இந்தத் தலை மயிர் நிற்காமல் வளர்ந்து கொண்டேயிருக்கிறது" என்றான்.

"அப்படியா! சரி, இதற்காக நீ ஏங்கிப் போய்விடாதே, டாக்டர் ஈசனிடம் போய்க் கேட்போம்" என்று சொன்னேன்.

இருவரும் உடனே புறப்பட்டுச் சென்றோம். 'பரமசிவனின் தலையைக் கண்டதும், டாக்டர் தமது வெற்றியைக் கண்டு மகிழ்ந்தவராய், 'ஆஹா ஹா, அப்போதே நான் சொல்லவில்லையா? கடைசியில் வெற்றிதானே?' என்று குதூகலத்துடன் கத்தினார்.

சிவனுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. "போதும் போதும் இந்த வெற்றியெல்லாம்! துஷ்ட மனிதா! என்னை மனிதக் குரங்காக மாற்றிவிடுவதென்று உன் எண்ணமா! உன் மருந்தும் நீயும் நாசமாய்ப் போக! இப்போதே ஏதாவது செய்து இதை நிவர்த்திக்கிறாயா? இல்லையா?" என்று அவன் கத்தினான்.

டாக்டர் ஏற்கெனவே இம்மாதிரி நிலைமை வரும் என்று எதிர் பார்த்தவர்போல், சடக்கென்று உள்ளே சென்று ஒரு வர்ண வஸ்துவுடன் திரும்பினார்.

சிவன் ஆத்திரத்துடன் "என்ன செய்யப் போகிறீர்?" என்று கேட்டான்.

ஆனால், டாக்டர் இதனால் கலங்கி விடவில்லை. நிதானமாய்ச் சிரித்தபடி, அவனுடைய பயத்தைப் போக்குவதற்காக, "மயிர்க்கால்களை அழிக்கப் போகிறேன். அதுவும் என்னால் கண்டுபிடிக்கப்பட்ட கருவியேயாகும்! அதைப் பற்றியும் சந்தேகமே வேண்டாம்" என்று சொல்லிக்கொண்டே, அதை அவன் தலையில் வைத்துத் தேய்த்தார். பிறகு, "இப்பொழுது நீங்கள் நிம்மதியாக வீட்டுக்குப் போகலாம். இனிமேல் உபத்திரவம் இல்லை" என்று நம்பிக்கை உண்டாகுமாறு சொல்லிவிட்டார்.

மறுநாள் காலையில் ஏழு மணி வரையில் தூங்கிக் கொண்டிருந்த என்னை, அவன் வந்து எழுப்பிவிட்டான். டாக்டரிடம் மீண்டும் ஓடினோம். அப்பொழுது தான் எழுந்திருந்து முகம் அலம்பச் சென்ற டாக்டர் எங்களைக் கண்டதும் திகைத்து விட்டார். "தலையிலிருந்து கால் வரையில் தேகம் முழுதும் நேற்றிரவு க்ஷவரம் செய்து கொண்டேன். சனியன் மறுபடியும் இப்படி வளர்ந்திருக்கிறதே" என்று சிவன் அலறினான்.

டாக்டரும் கூடப் பயந்துவிட்டார். எனக்கு நண்பனின் உடம்

பெல்லாம் மயிர்க் காடாகி விட்டதைக் கண்டு வருத்தம் தாங்க முடியவில்லை.

நிபுணர் மீண்டும் தாங்க முடியாத கலவரத்துடன் பரீட்சித்துப் பார்த்தார். சிவனோ பெருமூச்சு விட்டு, என்ன செய்வதென்று புரியாமல் கைகளைப் பிசைந்து கொண்டு தவித்தவனாய், "என்ன கஷ்டம் இது!" என்று புலம்பினான்.

கடைசியில் நான் 'எப்படியாவது சரிப்படுத்த வேண்டும்' என்று சொன்னதும், டாக்டர் புதிதாய் எதையோ கண்டு பிடித்து விட்டவர் போல் துள்ளி எழுந்தார்.

சுருக்கம் விழுந்த முகமும், செம்பட்டை மயிரும் உள்ள அந்த நிபுணருக்கு வயதாகி விட்டாலும், அநாயாசமாகவே எழுந்து தொண்டையைக் கனைத்துக் கொண்டு சொன்னதாவது:

'நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஆனாலும், உங்கள் உத்தியோக சம்பந்தமெல்லாம் தொலைய வேண்டியதுதான். ஓ! உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா? இல்லையே! இனிக் கல்யாணம் செய்து கொள்வதென்றும் நினைக்க வேண்டாம். ஆனால், ஜோராய்க் கிராப் செய்தால்,... அடடா! பார்ப்பதற்கு உங்கள் முகம் எப்படி இருக்கும்!'

"ஆனால், நீங்கள் இந்தக் கஷ்டத்திலிருந்து என்னை விடுவிக்க முடியாதா?" என்று சிவன் ஏக்கத்தோடு, கெஞ்சினான்.

"ஊஹூம் முடியாது, சார். அது முடியாது. இருந்தாலும், நான் உங்களுக்கு ஓர் உதவி செய்யலாம். என்னுடைய ஆராய்ச்சியால் உங்களுக்குக் கொஞ்சம் கஷ்டமுண்டாகி விட்டதல்லவா? இதோ பாருங்கள்! அதற்காக வேண்டுமானால், உங்களுக்கு நான் ஏராளமாய் ஊதியம் தரத் தயார். இங்கே உள்ள ஜன்னலருகில், தினந்தோறும் நீங்கள் வந்து காலையில் மூன்று மணி நேரம், மாலையில் மூன்று மணி நேரம் உட்கார்ந்திருங்கள். அதற்கு நல்ல சம்பளம் கொடுக்கிறேன்!" என்றார் நிபுணர்.

இவர் ஊதியம் அளிப்பதாகக் கூறுவதைக் கேட்க சிவன் காத்திருக்கவில்லை; அவன் ஓடியே போய் விட்டான். ஆனால், நான் மட்டும் பின் தங்கினேன்.

என்னமோ நடந்தது நடந்து விட்டது; இனி நடக்க வேண்டியதைக் கவனிப்பது நல்லதல்லவா? ஆகவே, எது எப்படியானாலும், இன்னும் இரண்டொரு வாரத்தில் இந்த உதவியைச் சிவன் ஏற்றுக்கொள்வான் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.



### காரணம் என்ன?

சுயராஜ்யம் சம்பாதிப்பதுகூட ஒரு கலைதான். நமது நாட்டிலோ ஏராளமான கலைஞர்கள் இருக்கிறீர்கள்; எத்தனையோ வருஷங்களாக உழைத்தும் வருகிறீர்கள். அப்படியிருந்தும், இன்னும் ஏன் சுயராஜ்யம் கிடைக்கவில்லை? இதைப்பற்றி நீங்கள் சிந்திக்கவேண்டும்; உங்கள் கலையின் மூலம் இதற்கு ஒரு வழிகண்டு பிடிக்கவேண்டும்.

—காந்தி, (ஹிந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ்)

# நஹாஸ் பாஷா

காரகா

எகிப்தின் எதிர்காலத்தைச் சீர் படுத்தக்கூடிய ஒரே மனிதர், இன்னும் அதிகாரம் அடையாத வராகவே இருக்கிறார். ஆனால், அவர் இல்லாமல் எகிப்தின் எதிர் காலம் சீரடைய முடியாது. அவர்தான் நஹாஸ்! இந்தப் பெயரில்தான் அந்தத் தேசம் பூராவும் அவரைத் தெரிந்து கொண்டிருக்கிறது.

அறுபத்தேழு வயதான முஸ் தாபா நஹாஸ் பாஷாதான் எகிப்து; எகிப்துதான் அவர் என்றாலும் சரி! நான், 'ஷாரி யர் நபாடட்' என்ற அவரு டைய அழகான வீட்டில் அவ ரைப் பார்த்தேன். ஆஜானு பாகுவான உருவமுடைய அவர், சுத்தமான உடை அணிந்திருப் பார். அவர் முகம் பிரமிட்டு களுக்குப் பக்கத்தில் உள்ள விக் கிரங்களின் முகம் மாதிரி யிருந் தது. அவருக்கு ஒரு முன் பல் இல்லா திருப்பதால், முகத்தோற் றத்தைக் கடுமையாகக் காட்டு கிறது. அவருடைய கூர்மை யான கண்கள் எதிர்காலத்தைத் துருவிப் பார்ப்பனபோல் இருக் கின்றன. நஹாஸிடம் ஓர் அலாதியான புன்னகை உண்டு. ஆனால், அதில் மகிழ்ச்சிக் களை இல்லை; அதிலே முரட்டுத் தன்மை, பகைமை, ஆத்திரம், எல்லாம் கலந்திருக்கின்றன. பார்ப்பவரைச் சிறுமைப் படுத் தும் அலட்சிய பாவம் அதில் குடிகொண்டிருக்கிறது. எகிப் திய விக்கிரங்களை எவரும் நாசப் படுத்த முடியாததுபோலத் தம் மையும் நாசப்படுத்த முடியாது என்று அவர் புன்னகை காட்டு கிறது! மனிதன் அதன் (எகிப் திய விக்கிரகத்தின்) மூக்கைக் கூட மூளியாக்க முடியாதே!

நஹாஸ் பாஷாவைப் போற்று வது இன்று சகஜமாக இல்லை. எகிப்தில், அவருடைய எதிரிகள் அவரைத் தொலைத்து விட்டதாக நினைக்கிறார்கள். அதிகாரத்தில் உள்ளோர் அவரை முறியடித்து விட்டதாக நம்புகிறார்கள். ஆனால், நஹாஸ் காலங் கருதிக் காத்துக்கொண்டிருக்கிறார். ஒரு நாள் அவர் திரும்பி வருவார். அந்த நாளில் அவர் எகிப்து முழு வதையும் தம் பக்கம் திருப்பி விடு வார்.

காலஞ்சென்ற ஸக்லுல் பாஷா நிர்மாணித்த 'வப்து'க் கட்சியின் முதுகெலும்பாகத் தற்போது இருப்பவர்தான் 'நஹாஸ்.' 1926-ல் ஸக்லுல் இறந்தவுடன் நஹாஸ் வப்துக் கட்சியின் தலை மையை ஏற்றார். வப்துக் கட்சி யில் பிளவுகள் உண்டானபோது சபல சித்தமுள்ளோர் கட்சி மாறினார்கள். நஹாஸ் அன்றும் சரி, இன்றும் சரி, இருந்த இடத் திலேயே இருக்கிறார். வப்துக் கட்சியும் அவருடன்தான் இருக் கிறது.

---

எகிப்தின் அதிதீவிர தேசியக் கட்சி வப்துக் கட்சி. அதன் தலைவர் நஹாஸ் பாஷா. அவர் எகிப்தின் மாஜி பிரதம மந்திரி. இன்று அவர் பதவியின்றி யிருக்கிறார். ஆனால், காலம் வரும்; அதிசமீபத்திலேயே வரும். அவர் மீண்டும் பதவிக்கு வரக் கூடும். இந்த நம்பிக்கை பலருக்கு இருந்து வருகிறது. ஆகவே, அவரைப் பற்றிய இந்தக் கட்டுரையை, 'பம்பாய்க் கிரானிக் கிள்' பத்திரிகையிலிருந்து எடுத்துத் தரு கிறோம்.

"இருபத்தேழு வருஷங்களுக்கு முன்னர் 'வப்துக்' கட்சியின் போராட்டம் ஆரம்பித்தது. ஆனல், இன்னும் எங்கள் லட்சியத்தை அடையவில்லை," என்று அவர் என்னிடம் கூறினர். "அன்னிய ஆதிக்கமில்லாத சுதந்தர எகிப்து வேண்டும், என்ற லட்சியத்தைக் கொண்டு 1918-ல் ஆரம்பிக்கப்பட்ட வப்துக் கட்சி இன்னும் அதே கொள்கையுடன் தான் இருக்கிறது. அந்தக் காலத்தில் வில்ஸன் (அப்போதைய அமெரிக்க ஜனதிபதியாயிருந்தவர்) ஏதோ சில உரிமைகளைத் தந்தார். எகிப்தும் அவைகளை ஒப்புக்கொண்டது. ஆனல் எகிப்து இன்னும் உண்மையான ஜனநாயக ஆட்சியைப் பெறவில்லை. ஒவ்வொரு தடவையும் எங்களுடன் சேர்ந்து போராடுபவர்கள், பாதை கரடு முரடாயிருப்பதைக் கண்டு வெளியேறிவிடுகிருர்கள். ஆனல், 'வப்துக் கட்சியின் சக்தி' இதனல் மாறிவிடுவதில்லை. எப்போதும் ஒரே கொள்கைதான். மனிதர்கள் மாறிவிடலாம். ஆனல் கொள்கை மாருது" என்று திரும்பவும் சொன்னர். "எட்டாவது சைனியத்தின் ஊக்கத்தைப் போலவா?" என்று நான்கேட்டேன்.

"அப்படித்தான். நீங்கள் சரியானதை நினைத்தீர்கள்" என்று சுத்தமான பிரஞ்சில் அழுத்தமாகக் கூறினர்.

பிறகு அவர் வப்துக் கட்சியின் கொள்கையை விளக்கினர். இன்னும் வப்துக் கட்சி தயாராகிக்கொண் டிருக்கிறது. சந்தர்ப்பங்கள், தேவைகள் இவைகளுக்குத் தக்கபடி அதன் கொள்கைகள் ஓர் எல்லைக்குட்பட்டுக் கட்டுப் படுத்தப்பட்டிருக்கின்றன.. அந்தக் கட்சி காந்தீய அஹிம்ஸைத் தத்துவத்தைத் தழுவியதல்ல.

எதிர்க் கட்சிகள் ஒன்றுகூடி எதிர்ப்பதால் இப்போது வப்துக் கட்சிக்கு நெருக்கடியான சமயம் என்பதை அவர் ஒப்புக்கொள்கிருர். ஆகையினல், அவர் வெளியிலிருந்து போராடத் தீர்மானித்திருக்கிருர். பல முன்னேற்றமான காரியங்களுக்கு அவர் திட்டம் போட்டிருக்கிருர். ஆனல், அந்தத் திட்டங்கள் என்னவென்று அவர் சொல்லத் தயாராயில்லை. தவிரவும் எதிர்காலத்துக் கேற்ற ஒரு நிச்சயமான கொள்கையிருப்பதாகவும் கூறிப் பொறுப்பேற்றுக்கொள்ள மாட்டார். சந்தர்ப்பங்கள்தான் வப்துக் கட்சியின் எதிர்காலக் கொள்கையை நிர்ணயிக்க வேண்டும்.

அவர் போராட்டத்தை உன்னிப்பாக ஆராய்ந்தார். உள்நாடு பூராவும் 'அரசனே ஏகபோக உரிமையுடன் நாட்டை ஆள்வதா? அல்லது ஜனப்பிரதிநிதி சபைக்குக் கட்டுப்பட்டு ஆள்வதா?' என்ற கேள்விதான் ப்ரவியிருந்தது. யாதொரு நிபந்தனையுமற்ற பூரண சுதந்தர எகிப்துக்காகவே வப்துக் கட்சி போராடி வருகிறது.

ஜனங்களிடையே நஹாஸ் பெரிதும் செல்வாக்குள்ளவர். சாதாரண மனிதரா யிருந்த இவர், ஜன ஆதரவால்தான் பிரமுகரானர். நவநாகரிகப் போக்கில் அவருக்கு அவ்வளவாக விருப்பம் இல்லை. அவர் நிறையப் பேசுகிருர். ஆனல், பிறர் பேசுவதை அதிகம் கேட்பதில்லை. அவருக்குள்ள தன்னம்பிக்கை அபாரமானது. அவருடைய குணத்தைப் பற்றியும், ஜனங்களிடம் அவருக்குள்ள மதிப்பைப் பற்றியும் பரவியிருக்கும் கதைகள் பல. இத்

தாலியர் 'ஸிதிபரானி'க்கு வந்திருந்தபோது, ஒரு சின்னக் கிராமத்தின் ஜனங்கள் தங்கள் ஊருக்கு வந்த நஹாஸிடம் 'இத்தாலியர் நமது நண்பர்கள் தானே; அவர்களை ஏன் உள்ளே விடாமல் தடுக்க வேண்டும்?' என்று கேட்டார்கள். எகிப்தியர்களுடன் இத்தாலியர் சவுஜன்யமாய்த்தான் அப்போது இருந்தார்கள். ஆனால், நஹாஸ் அவர்கள் எதிரில் ஒரு பரிகாரியை அழைத்து 'இந்தக் கிராமத்தில் எத்தனை ஆங்கிலப் பரிகாரிகள் இருக்கிறார்கள்?' என்று கேட்டார்.

'ஒருவரும் இல்லை!' என்று அவன் பதில் சொன்னான்.

'இத்தாலியப் பரிகாரிகள் எத்தனைபேர் இந்த நாட்டில் (எகிப்தின்) இருக்கிறார்கள்?' என்று மீண்டும் கேட்டார்.

'அனேகர் இருக்கிறார்கள்' என்று பதில் வந்தது.

'இனிமேல் யாராவது ஒருவன் (பரிகாரி) இங்கு வந்தால் உன் வேலை போய்விடும்' என்று எச்சரித்தார்.

ஜெர்மானியர் நைல் நதிப் பள்ளத்தாக்கில் வந்துவிட்டனர். எல் அலாமின் பிரதேசத்திற்கு உண்டான சோதனை போலப் பாயூம் பிராந்தியத்துக்கும் ஆபத்து வந்துவிட்டது! பாயூம் பிரதேசவாசிகள், நஹாஸ் (இப்பொழுது இவர் எகிப்து பிரதம மந்திரியாயிருந்தார்) ஆபீசுக்கே ஓடி வந்தனர்.

"ஜெர்மானியர் எதிர்ப்புகளையெல்லாம் தகர்த்துக்கொண்டு முன்னேறி வருகிறார்கள். பிரிட்டிஷ் படைகளோ அவர்களை எதிர்க்க முடியவில்லை. இப்பொழுது யார் நம்மைக் காப்பாற்றுவார்கள்?" என்று அவரிடம் சொல்லிக் கேட்டார்கள். நஹாஸ் பதிலளித்ததாவது: "எகிப்து கடவுளின் நாடு. ஆகவே, அவர் நம்மைக் கைவிடமாட்டார். அவரை நாம் பிரார்த்திப்போம்!"

இப்படிச் சொல்லிவிட்டு மற்றவர்களுடன் அவரும் மண்டியிட்டு ஆண்டவனைப் பிரார்த்திக்கலானார். பாயூம் வாசிகள் இனிப் படையெடுப்புப் பயம் இல்லையென்று நம்பிக்கையுடன் வீடு திரும்பினார்கள். நஹாஸ் பயப்பட வேண்டாம் என்று சொல்லிவிட்டாரல்லவா? இப்பொழுதுங்கூட எகிப்து ஜனங்கள் 'நஹாஸ் எல்லாம் தெரிந்தவர். ஆகவே எகிப்துக்குத் தோல்வியில்லை' என்று நம்புகின்றனர். அதுதான் அவருடைய பலம்! நஹாஸின் மதிப்பை அறிய இன்னுமொரு சந்தர்ப்பம் உண்டு. மேற்கத்திப் பாலைவனத்தில் பிரிட்டிஷ் சேனை இருந்தது. லார்டு கில்லியர்ன் என்ற பிரிட்டிஷ் பிரதிநிதி, இந்தப் படை நிறுத்தம் எகிப்தியரிடையே ஆதரவைப் பெறவேண்டும் என்று எண்ணினார். இதற்கான வேலையை வெற்றிகரமாகச் செய்யக்கூடியவர் யார் என்று ஆராய்ந்தார். எகிப்து ஜனங்களிடம் நம்பிக்கையும் மதிப்புமுள்ள நஹாஸ்தான் இதற்கேற்றவரென அவர் தெரிந்துகொண்டார். லார்டு கில்லியர்ன் மிகுந்த முயற்சியும் சிரத்தையும் கொண்டு அரும்பாடுபட்டதால் தான் நஹாஸ் பிரதம மந்திரியாக முடிந்தது. ஏன் என்றால் நஹாஸ் அரசருடன் சவுஜன்யமுள்ளவராயில்லை. இரண்டரை வருஷ காலம் அவர் அதிகாரத்தில் இருந்

தார். அக்கால மெல்லாம் அவருக்கும் அரசருக்கும் தகராறுகள் இருந்துகொண்டே இருந்தன. ஜனப்பிரதிநிதி சபைக்குப் பொறுப்பாக இருந்தே அரசர் ஆளவேண்டு மென்ற நோக்கம் உள்ள நஹாஸுக்கும், அரசருக்கும் தகராறு இருந்ததில் ஆச்சரியம் ஒன்று மில்லை. இந்தத் தகராறு ஒரு சம்பவத்தால் உச்ச நிலையை அடைந்துவிட்டது. அரசர் ஒரு மசூதிக்கு விஜயம் செய்த போது, அங்கு இரண்டு விருதுக் கொடிகள் கட்டப்பட்டிருந்தன. அவைகளில் 'அரசர் நீடூழி வாழ்க' என்றும் "நஹாஸ் நீடூழி வாழ்க" என்றும் வாக்கியங்கள் இருந்தன. அரசர், ஒன்றுதான் அங்கு இருக்கவேண்டும் என்று விரும்பினார். இதனால் உண்டான நெருக்கடி முற்றிக் கடைசியில் நஹாஸின் 'ராஜிநாமா'வில் வந்து முடிந்தது. தன் பதவி போனதைப்பற்றி அவர் முதன் முதலாக ரேடியோ மூலம்தான் அறிந்துகொண்டார் என்று, நஹாஸின் நெருங்கிய நண்பர் ஒருவர் எனக்குச் சொன்னார்.

அதுமுதல் நஹாஸ் எகிப்திய அரசியல் அரங்கத்திலிருந்து வெளியேறி விட்டார். அவரைப் பற்றியோ அல்லது அவருடைய வப்துக் கட்சியைப் பற்றியோ அதற்குப் பிறகு நாம் எதுவும் கேள்விப்பட வில்லை.

நஹாஸ்தான் எகிப்தின் எதிர்காலத்தைச் சீர்படுத்தக் கூடியவர்.

*

## அழுத பிள்ளைக்கே அருள்

ஒரு தாய்க்கு அநேகம் குழந்தைக ளிருக்கின்றன. ஒன்றின் கையில் ஒரு பவளத்தையும், இன்னொன்றின் கையில் ஒரு மரப்பாவையையும், மற்றொன்றினிடம் பக்ஷணங்களையும் கொடுத்திருக்கிறாள். ஆகவே, அந்தக் குழந்தைகள், தாயை மறந்து தங்கள் தங்களுடைய விளையாட்டுப் பொருள்களில் கருத்தூன்றி யிருக்கின்றன. தாயோ, தன் காரியங்களைச் செய்துகொண் டிருக்கிறாள். ஆயினும், பொம்மைகளைத் தூரப் போட்டு விட்டு, "அம்மா! அம்மா!" என்று அழும் குழந்தையிடம் அவள் உடனே ஓடிவந்து லாலனை பாலனை செய்கிறாள். அதேபோல, ஓ மனிதனே! நீ உலக விஷயங்களில் அழுந்தியவனாய் ஜகன்மாதாவை மறந்திருக்கிறாய். அவைகளைத் தூர அகற்றி விட்டு அவளைப் பரிவுடன் அழைப்பாயானால், அவள் உடனே வந்து உன்னைத் தன் திருக்கைகளில் எடுத்துக் கொள்வாள்.

— ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

## காந்திஜியின் மக்கட்பேறு

சமீபத்தில் பிரிட்டிஷ் பார்லிமெண்ட் தூதுக்கோஷ்டியார், மகாத்மா காந்தியைச் சென்னையில் சந்தித்தபோது, ஒரு ருசிகரமான சம்பாஷணை நடந்தது.

தூதுக்கோஷ்டியில் ஒருவரான ஸ்ரீமதி நிக்கோல்ஸ் என்ற பெண்மணி; காந்திஜியை, "தங்களுக்கு எத்தனை பிள்ளைகள்?" என்று கேட்டார்.

காந்திஜி: நாலு.
ஸ்ரீமதி நிக்கோல்ஸ்: பெண்கள்?
காந்திஜி: பல கோடி.
(காந்திஜிக்குச் சொந்தத்தில் பெண் குழந்தைகளே கிடையாது.)

# எகிப்தும் இந்தியாவும்

போரம் நிருபர்

ஒரே உலகம் வேண்டும் என்ற இன்றையக் கொள்கைக் கேற்ப, உலகத்தின் மிகப்பெரிய மைனரிட்டியான பெண் இனமும் முன்னேறி வருகிறது. சர்வ தேசங்களிலும் உள்ள பெண்கள் விழிப்படைந்து விட்டார்கள். தங்களுடைய சொந்த முயற்சி மூலம் எங்கும் சந்தோஷத்தை நிலவச்செய்கின்றார்கள். எகிப்தைச் சேர்ந்த 'ஸ்ரீமதி அமீனா எல்சைத்' என்னும் பெண்மணி, இன்று நம்மிடையே (இந்தியாவில்) இருக்கிறார். எகிப்து எப்படித் தன் சுதந்தரப் போராட்டத்தை நடத்தியதென்றும், இந்தியா இன்று எந்த ஆதிக்கத்தின் கீழ் நசுக்குண்டு கிடக்கிறதோ அதே ஆதிக்கத்திலிருந்து அவர்கள் (எகிப்தியர்) எப்படிப் போராடிச் சுதந்தரம் பெற்றார்கள் என்பதையும் நமக்குக் கூறுகிறார்.

ஸ்ரீமதி எல்சைத் எகிப்து எப்படித் தன் அரசியல் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொண்டது என்பதைக் கூறும்போது, 'தேசிய அபிலாஷைகளையும், அடிமைத் தன்மையிலிருந்து விடுதலை பெற்றுப் பிறப்புரிமையான சுதந்தரத்தையும் அடையவேண்டும் என்று, ஆவேச உணர்ச்சி ஏற்பட்டதனால்தான் எகிப்து விடுதலையடைந்தது என்று கூறினர். பொருளாதாரப் பிரச்சினையும் கல்வியின்மையும் சேர்ந்து எகிப்தின் தேசிய ஆர்வத்தைக் கிளறிவிட்டதும் அன்றி இவைகளே போராட்டத்தின் முக்கியக் கருவிகளாகவும் மாறிவிட்டன. எகிப்திய மாணவர்கள் கிராமங் கிராமமாகச் சென்று பொதுமக்களுக்குக் கல்வியறிவூட்டினர்கள். எகிப்திலுள்ள முஸ்லீம்களுக்கும் கிறிஸ்துவர்களுக்கும் பிளவுண்டாக்கி விரோதமுண்டு பண்ணப் பிரிட்டிஷார் முயன்றார்கள். ஆனால் எகிப்தியர்கள், ஆதிபத்திய வாதிகளின் புரட்டுகளைத் தகர்த்து எறிந்துவிட்டார்கள். மைனரிட்டியாயுள்ள கிறிஸ்துவர்கள் தங்களுக்குப் பாதுகாப்பு உரிமைகளைக் கேட்கும்படி தூண்டப்பட்டனர். என்றாலும் மெஜாரிட்டியான எகிப்தியர், நூற்றுக்குப் பதினேழே பங்குள்ள கிறிஸ்துவ மக்களுக்குச் சட்ட சபையில் நாற்பது சதவிகிதம் பிரதிநிதித்துவம் அளித்து நிலைமையைத் திறமையுடன் சமாளித்தனர். எகிப்தில் கிறிஸ்துவர், முஸ்லீம், யூதர் என்ற வித்தியாசமே இல்லை. இந்தியப் பெண்கள் எகிப்தின் இந்த நிலையைத் தெரிந்துகொண்டு தங்கள் ஆண்களுக்குக் கற்பிக்க வேண்டும்.

*இந்தியாவைப் போலவே சுதந்தரமின்றித் தவித்த நாடுகளில் ஒன்று எகிப்து. இன்னமும்கூட அது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் பிடிப்பினின்றும் அடியோடு விடுபடவில்லை. இருந்தாலும், அந்த நாட்டின சமூக வாழ்க்கை எவ்வளவோ அபிவிருத்தியடைந்திருக்கிறது, அதைக் காட்டும் இந்தக் கட்டுரை 'போரம்' பத்திரிகையில் வெளியாகியுள்ளது.*

கல்வியைப் பொறுத்தவரை எகிப்து அமோகமாக முன்னேறியிருக்கிறது. சட்டப்படி

ஒவ்வொருவரும் கல்வி கற்றுத் தான் ஆகவேண்டும்.

இதுமட்டுமா? தங்களுடைய வீட்டு வேலைக்காரர்களைக் கூடப் படிப்புக்குத் தினசரி அனுப்ப வேண்டும் என்பது கட்டாயச் சட்டமாகும். இதை மீறினால் மூன்று பவுன் அபராதம்! இதனால் கட்டாயக் கல்வி நல்லபயன் தந்தது. இன்று எகிப்தில் நாற்பது சதவிகிதம் பெண்கள் கல்வியறிவுள்ளவர்கள் என்று கூறலாம். எகிப்தியப் பெண்கள் ஆண்களைப்போல் பல்வேறு துறையிலும் பங்கெடுத்துக் கல்வி பயிலுகின்றனர். பெண்களுக்கென்று அங்கே தனிக் கல்லூரிகளோ, கலாசாலைகளோ கிடையா. என்றாலும், அனுஷ்டான ரீதியில் பதின்மூன்று வயது முதல் பதினாறு வயதுவரை பெண்கள் ஆண்களுடன் சேர்ந்து படிக்க அனுமதிப்பதில்லை. எகிப்தியர் மனப்போக்குப்படி இந்த மூன்று வருஷங்களும் 'அபாய' கரமானவை! எகிப்திய மாணவர்கள் அரசியல் அறிவு பெற்றிருப்பதுடன் தேசத்தின் அரசியல் பகுதியிலும் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்கின்றார்கள். மாணவர்கள் தங்கள் ஸ்தாபனங்களைத் திறமையாக நிர்வகிக்கின்றார்கள். எகிப்திய மாணவர் இயக்கம், தேச ஆட்சி முறையையே எதிர்த்து மாற்றும்படியான அளவுக்குப் பலம் வாய்ந்ததாயிருக்கிறது.

ஸ்ரீமதி எல்சைத், மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பற்றிச் சொன்னபோது, இந்தியாவிலுள்ளதைவிட எவ்வளவோ மேம்பட்டது எகிப்தியர் வாழ்க்கைத்தரம், என்று அபிப்பிராயப் படுகிறார். இதனால்தானோ என்னவோ எகிப்தில் 'சோஷலிசம்' அதிகமாகப் பரவவில்லை. சோஷலிஸ்டுகள், துருவிப்பார்க்க வேண்டிய அளவுக்கு மைனாரிடியாயிருக்கிறார்கள் என்று அவர் சொன்னார்.

தெருவுக்குத் தெரு பிச்சையெடுப்பதை எகிப்தில் சட்டபூர்வமாகத் தடுத்திருக்கிறார்கள். இருந்தாலும் எகிப்தில் பூரணமாகப் பிச்சை யெடுப்பதை ஒழிக்க முடியவில்லை. எகிப்தியப் பெண்களின் வாழ்க்கையைப் பற்றிக் குறிப்பிடும்போது, பெண்களுக்கு என்று தேசிய (சொந்தமான) ஆடையணி ஒன்றும் இல்லையென்று சொன்னார். காலப் போக்கிற்கேற்ப, துருக்கியரைப் போலவும், ஐரோப்பிய முறையிலும் உடை தரித்து வருகின்றனர். என்றாலும், ஐரோப்பிய முறைதான் அதிகமாகப் பழக்கத்திலுள்ளது.

ஸ்ரீமதி எல்சைத், தமது தேசத்தின் ஆர்வங்களையும், இதுவரை சாதித்துள்ளவைகளையும் வெகு தெளிவாக எடுத்துச் சொன்னதும் அன்றி எகிப்தியப் பெண்களின் எழுச்சியையும், அவர்கள் தாய் நாட்டின் பெருமைக்கும், சுதந்தர நிர்மாணத்துக்கும் எவ்வளவு பங்கெடுத்து உழைக்கிறார்கள் என்பதையும் விளக்கினார். இந்தியப் பெண்கள் இம் மாதிரியான மத்தியக் கிழக்குப் பிரதேசங்களி லிருந்து எவ்வளவோ படிப்பினைகளைக் கற்றுக் கொள்ளலாம். சமீப காலம் வரை இந்த நாடுகள் இந்தியாவைவிட எவ்வளவோ பிற்போக்கான நிலைமையில் இருந்தன. ஆனாலும் நம் கண்ணெதிரிலேயே பல துறைகளிலும் முன்னேற்றம் அடைந்திருக்கின்றன.

*

# விடுதலைக்கு வழி

மகாத்மா காந்தி

**கேள்வி:** இருப்புப் பாதைகளையும், வக்கீல்களையும், வைத்தியர்களையும் தாங்கள் குறை கூறுகிறீர்கள். யந்திரங்கள் அனைத்தையும் தள்ளி விடுவீர்களென்று நான் அறிகிறேன். அவ்வாருனல் நாகரிகம் என்பது யாது?

**பதில்:** இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வது கடினமல்ல. இந்தியா உற்பத்தி செய்திருக்கிற நாகரிகம் உலகத்தில் எதற்கும் குறைந்ததன்று என்பது எனது கருத்து. எதுவும் நமது முன்னேர்கள் விதைத்த விதைக்கு நிகராகாது. ரோமாபுரி அழிந்து போய்விட்டது. கிரீசும் அதே கதியை அடைந்தது. பரோவாக்களின் வன்மை உடைந்து போய் விட்டது. ஜப்பான் மேனுடாய் விட்டது. சீனத்தைப் பற்றி ஒன்றும் சொல்ல முடியாது. ஆனல் இந்தியா, இன்னும் எவ்வாருே அஸ்திவாரத்தில் உறுதியாயிருக்கிறது. ஐரோப்பாவிலுள்ள ஜனங்கள், தங்கள் பண்டைப் பெருமையை இழந்து விட்ட கிரீஸ், ரோம் நாட்டவர்களின் நூல்களினின்று தங்கள் பாடங்களைக் கற்றுக் கொள்கிருர்கள். அவர்களிடமிருந்து கற்றுக் கொள்ள முயல்வதில் கிரேக்கர்கள், ரோமர்களின் தவறுகளைத் தாங்கள் விலக்கி விடலாம் என்று ஐரோப்பியர்கள் நினைத்துக் கொள்கிருர்கள். அவர்கள் பரிதாப நிலைமை இவ்வாறிருக்கிறது. இவை அனைத்திற்கும் இடையில், பாரத தேவி அசையாமல் நிற்கின்ருள்; இதுதான் அவள் பெருமை. எந்த மாறுதல்களையும் அவர்களை ஏற்றுக் கொள்ளச் செய்ய முடியாதென்றும், இந்திய ஜனங்கள் அநாகரிக முள்ளவர்களென்றும், அஞ்ஞானிகளென்றும், மந்த குணம் உள்ளவர்களென்றும் இந்தியாவின் மீது குறை கூறுகிருர்கள். இது உண்மையில் நமது குணத்தின் மீது கூறப்படும் குற்றமே. அனுபவத்தில் நாம் ஆராய்ந்து உண்மையென்று கண்டதை நாம் மாற்றத் துணிவதில்லை. அநேகர் இந்தியாவிற்கு வலிய யோசனை கூறுகின்றனர். ஆனல், அவள் உறுதியாய் நிற்கிருள். இது அவளது சிறப்பு. இது நமது நம்பிக்கைக்குப் பெரிய ஆதாரமாகும்.

*அன்றிருந்தபடிதான் இன்றுமிருக்கிருர் காந்திஜி. சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்குமுன்னே, தம் கொள்கைகளையெல்லாம் விளக்கி, கேள்வி-பதில்களாக 'இந்திய சுயராஜ்யம்' என்ருெரு புத்தகம் எழுதி வெளியிட்டார். அதில் உள்ள கருத்துக்கள்தான் இன்றும் காந்திஜியின் மனதில் பின்னும் வலுவடைந்திருக்கின்றன. 'சக்தி காரியாலய'ப் பிரசுரமாகத் தமிழில் வெளிவந்துள்ள அந்த நூலில் இருந்து, ஒரு பகுதியை இங்கே எடுத்துத் தந்திருக்கிருேம்.*

நாகரிகம் என்பது மனிதனுக்குக் கடமை—வழியைக் காட்டுகின்ற ஒழுக்க முறையாகும். கடமையை இயற்றல் என்பதும், தர்மத்தை அனுஷ்டித்தல் என்பதும் ஒரே பொருளைக் கொண்டவை. தர்மத்தை அனுஷ்டித்தால் நமது மனத்தையும், மனோவிகாரங்களையும் அடக்கி அவற்றின்மீது ஆட்சி பெறலாம். இவ்வாறு செய்தால் நாம் நம்மை அறிகிருேம். நாகரிகம் என்ப

தற்குக் கூர்ஜர மொழியிலுள்ள சொல்லுக்கு "நல்லொழுக்கம்" என்று பொருள்.

இந்த இலக்கணம் சரியானதாயின், அநேக ஆசிரியர்கள் காட்டியுள்ளவாறு, இந்தியா எவரிடமிருந்தேனும் அறிந்து கொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை. இது இருக்கவேண்டிய முறையில் இருக்கிறது. மனம் ஒரு அமைதியற்ற பறவைபோல் இருப்பதை நாம் அறிகிறோம். எவ்வளவுக் கெவ்வளவு அதற்குக் கிடைக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அதன் ஆசை மிகுதிப் படுகிறது; பின்னும் திருப்தியற்ற நிலையில் இருக்கிறது. நாம் நமது மனோ விகாரங்களுக்கு எவ்வளவு மிகுதியாய் இடங் கொடுக்கிறோமோ அவ்வளவு மிகுதியாய் அவை கட்டுக் கடங்காதனவாய் விடுகின்றன. அதனால், நமது முன்னோர்கள் நமது இந்திரிய சுகங்களுக்கு ஓர் அளவு ஏற்படுத்தினார்கள். (சுகம் என்பது பெரும்பாலும் ஒரு மனோ நிலைமை என்று அவர்கள் அறிந்தார்கள். ஒரு மனிதன் செல்வனாய் இருப்பதாலேயே சந்தோஷ முள்ளவனாகவும், ஏழையாயிருப்பதாலேயே துக்க முள்ளவனாகவும் இருப்பதில்லை. செல்வர்கள் பெரும்பாலும் துக்க முள்ளவர்களா யிருப்பதைக் காண்கிறோம்; ஏழைகள் சந்தோஷமுள்ளவர்களா யிருப்பதைக் காண்கிறோம்.) கோடிக் கணக்கானவர்கள் எப்பொழுதும் ஏழைகளாகவே யிருப்பார்கள். இவற்றையெல்லாம் நோக்கி நமது முன்னோர்கள் நமக்குச் சுகங்களும் இன்பங்களும் கூடா வென்று விலக்கினார்கள். ஆயிரக் கணக்கான வருஷங்களுக்கு முன் வழங்கிய கலப்பைகளையே நாம் இன்னும் உபயோகித்து வருகிறோம். முற்காலத்தில் நாம் குடியிருந்தவை போன்ற அதே மாதிரியான குடிசைகளில்தான் இன்னும் வாழ்ந்து வருகிறோம். நமது நாட்டுக் கல்வியும் முன் போலவேதான் இருந்து வருகிறது. உயிரை வதைக்கும் போட்டி முறை நம்மிடம் இருந்ததில்லை. ஒவ்வொருவரும் தங்கள் சொந்தத் தொழிலையோ வியாபாரத்தையோ செய்து கொண்டு, ஓர் ஒழுங்கான கூலியைப் பெற்று வந்தனர். நமக்கு யந்திரங்களைக் கண்டு பிடிக்கத் தெரியாது என்பதல்ல; ஆனால், இத்தகைய காரியங்களில் நாம் மனத்தைச் செலுத்தினால், நாம் அடிமைகளாகி, நமது தரும சிந்தனையை இழந்து விடுவோமென்று நமது முன்னோர்கள் அறிந்திருந்தார்கள். எனவே, அவர்கள் தீர்க்காலோசனை செய்து, நாம் நமது கைகளாலும் கால்களாலும் செய்யக் கூடிய காரியங்களையே செய்ய வேண்டுமென்று முடிவு செய்தார்கள். மேலும், அவர்கள் பெரிய பட்டணங்கள் மயக்கானவை யென்றும், பயனற்ற தடைகளென்றும், ஜனங்கள் அவற்றில் சுகமாய் வாழமாட்டார்களென்றும், திருட்டுக் கூட்டத்தாரும் கொள்ளைக் காரர்களும் அவற்றில் பல்குவார்களென்றும், விபசாரமும் மற்றத் தீமைகளும் பெருகுமென்றும், ஏழைகளைச் செல்வர்கள் வருத்துவார்களென்றும் அறிந்தார்கள். எனவே அவர்கள் சிறிய கிராமங்களிலே திருப்தியடைந்து விட்டார்கள். அரசர்களும் அவர்கள் வாளாண்மையும், தருமமாகிய வாளுக்குத் தாழ்ந்தவை யென்று அறிந்து, மண்ணுலகத்து மன்னர்கள் ரிஷிகளுக்கும் முனிவர்களுக்

கும் தாழ்ந்தவர்க ளென்று முடிவு செய்தார்கள். இத்தகைய அரசியலைக் கொண்டுள்ள ஒரு நாடு பிறரிட மிருந்து படித்துக் கொள்வதை விடப் பிறருக்குக் கற்றுக் கொடுப்பதற்கு மிகவும் தகுதியானது. இந்த நாட்டில் நீதிஸ்தலங்கள் இருந்தன. நியாய வாதிகளும், வைத்தியர்களும் இருந்தார்கள். ஆனல், அவர்க ளெல்லாரும் ஓர் அளவுக்கு உட்பட்டிருந்தார்கள். இந்தத் தொழில்க ளெல்லாம் விசேஷமாய் உயர்ந்தவை யல்ல வென்பது ஒவ்வொருவருக்கும் தெரியும். மேலும் இந்த வக்கீல்களும், வைத்தியர்களும் ஜனங்களைக் கொள்ளை யிடவில்லை. அவர்கள் ஜனங்களைச் சார்ந்தவர்களென்று கருதப்பட்டார்கள்; அவர்களை ஜனங்களுக்கு எஜமானர்களென்று கருதவில்லை. நீதி பரிபாலனம் கூடியவரை நன்ருய் நடந்துவந்தது. நீதிஸ்தலங்களுக்குச் செல்லா திருப்பதே பொது விதியா யிருந்தது. ஜனங்களை அவற்றில் மயக்கித் தள்ளுவதற்குக் குமாஸ்தாக்கள் அக்காலத்தில் இல்லை. இந்தத் தீமையும் கூட ராஜதானிகளிலும் அவற்றைச் சுற்றியுமே இருந்தது. பொது ஜனங்கள் சுயாதீனமாய் வாழ்ந்து, தங்கள் விவசாயத் தொழிலைச் செய்து வந்தார்கள். உண்மையான சுய ஆட்சியை அவர்கள் அனுபவித்து வந்தார்கள்.

இப்பொழுதும்கூட, இந்தப் பாழான நவீன நாகரிகம் செல்லாத இடங்களில் இந்தியா முன்போலவே இருக்கிறது. அந்தப் பகுதியிலுள்ள ஜனங்கள் உமது புதிய நோக்கங்களைக் கேட்டால்- மிகவும் சரியாகவே — சிரிப்பார்கள். ஆங்கிலேயர்கள் அவர்களை ஆளவில்லை; நீரும் அவர்களை ஒரு நாளும் ஆள முடியாது. நாம் யாருக்காகப் பேசுகிருேமோ அவர்களை நமக்குத் தெரியாது. அவர்களும் நம்மை அறியார்கள். நீரும், தாய் நாட்டை நேசிக்கிற உம் போன்றவர்களும், இருப்புப் பாதைகளால் இன்னும் அசுத்தமடையா திருக்கின்ற நாட்டுப் புறங்களுக்குச் சென்று அங்கே ஆறுமாத காலம் வாழ்ந்திருக்க வேண்டும். அப்பொழுது நீர் தேசபக்தராய், சுயராஜ்யத்தைப் பற்றிப் பேசலாம்.

எதனை நான் உண்மையான நாகரிகமென்று கருதுகிறேனென்பதை இப்பொழுது நீர் அறிந்து கொண்டீர். நான் மேலே விவரித்த நிலைமைகளை மாற்ற விரும்புவோர் தேசத் துரோகிகள், பாவிகள் ஆவார்.

கே: இந்தியா தாங்கள் விவரித்துள்ளபடியே இருந்தால் சரிதான். ஆனல், வேறு மாதிரியாகவும் இருக்கிறதே. அங்கே நூற்றுக்கணக்கான குழந்தை விதவைகள் இருக்கிருர்கள். இரண்டு வயதுக் குழந்தைகள் கலியாணம் செய்யப் பெறுகிருர்கள். பன்னிரண்டு வயதுச் சிறுமிகள் தாய்களாயும் மனைவிகளாயும் வாழ்கிருர்கள். ஸ்திரீகள் அநேக புருஷர்களை மணந்து கொள்கிருர்கள். நியோகி வழக்கம் நடந்துவருகிறது; மதம் என்ற பெயரால் பெண்கள் வேசைகளாயிருக்கிருர்கள். மதம் என்ற பெயரால் வெள்ளாடுகளும் செம்மறியாடுகளும் கொலை செய்யப் படுகின்றன. இவற்றையும் தாங்கள் விவரித்த நாகரிகத்தின் சின்னங்களென்று கருதுகிறீர்களா?

ப: நீர் கருதியது தவறு. நீர் காட்டிய குறைகள் குறை

களே. பழைய நாகரிகமென்று அவற்றை எவரும் தவறாகக் கருதுவ தில்லை. அவை, நாகரிகத்தையும் மீறி இருக்கின்றன. அவற்றை நீக்குமாறு முயற்சிகள் எப்பொழுதும் செய்யப்பட்டிருக்கின்றன; இனியும் செய்யப்படும். நம்மிடையே தோன்றியுள்ள புதிய உணர்ச்சியை, இந்தத் தீமைகளை நம்மினின்று ஒழிக்க நாம் பயன்படுத்தலாம். ஆனால், நவீன நாகரிகத்தின் சின்னங்க ளென்று நான் உமக்கு விவரித்தவற்றை அதன் சீடர்கள் அங்கீகரித்திருக்கிறார்கள். உலகத்தின் எந்தப் பகுதியிலும், எந்த நாகரிகத்திலும், மனிதர்கள் அனைவரும் பூரணத்துவம் அடைந்திருப்ப தில்லை இந்திய நாகரிகத்தின் இயற்கை, தர்மத்தை உயர்த்துவது; மேல் நாட்டு நாகரிகத்தின் இயற்கை, அதர்மத்தை வளர்ப்பதாகும். பிந்தியதில் கடவுள் இல்லை. முந்தியது (இந்திய நாகரிகம்) கடவுள்மீது நம்பிக்கையை மூலமாகக் கொண்டது. இவ்வாறு அறிந்து, இவ்வாறு நம்பி, ஒரு குழந்தையானது தனது தாயின் மார்பைப் பற்றிக் கொள்வது போல, பழைய இந்திய நாகரிகத்தைப் பற்றிக்கொள்ளுவது இந்தியாமீது, அன்பு செய்யும் ஒவ்வொருவருக்கும் கடமையாகும்.

கே: நாகரிகத்தைப் பற்றித் தங்கள் கொள்கைகளை நான் பாராட்டுகிறேன். நான் அவற்றைப் பற்றிச் சிந்திக்கவேண்டும். நான் அனைத்தையும் உடனே அங்கீகரித்துவிட முடியாது. அவ்வாறானால் இத்தகைய நோக்கங்களை வைத்துக்கொண்டு, இந்தியா விடுதலை பெறுவதற்குத் தாங்கள் என்ன யோசனை கூறுகிறீர்கள்?

ப: எனது கொள்கைகளை உடனே ஒத்துக்கொள்ள வேண்டுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. உம்மையொத்த வாசகர்களிடம் அவற்றைச் சொல்வது எனது கடமை. பாக்கி வேலை, காலப் போக்கில் நடைபெறும். இந்தியாவின் விடுதலைக்குரிய நிலைமைகளை நாம் முன்னரே ஆராய்ச்சி செய்திருக்கிறோம். ஆனால்; நாம் மறைமுகமாக அவ்வாறு செய்திருக்கிறோம்; இப்பொழுது நேராகவே ஆராய்ச்சி செய்வோம். நோயின் மூலத்தை நீக்கினால் நோயே நீங்குமென்பது உலகம் அறிந்த நீதியாகும். அது போலவே, இந்தியாவின் அடிமைத்தனத்திற்குரிய காரணத்தை நீக்கினால், இந்தியா விடுதலை பெற்றுவிடும்.

கே: இந்திய நாகரிகம், தாங்கள் சொல்லுமாறு, அனைத்திலும் சிறந்ததென்றால், இந்தியாவின் அடிமைத்தனத்திற்கு யாது காரணம் சொல்லுகிறீர்கள்?

ப: இந்த நாகரிகம் சந்தேகமின்றி அனைத்திலும் சிறந்ததே. ஆனால், எல்லா நாகரிகங்களுக்கும் சோதனை உண்டென்பதைக் கவனிக்கவேண்டும். நிலையான நாகரிகம் அதனைக் கடந்து உயிர் வாழ்கிறது. இந்தியாவின் மைந்தர்கள் குறைவுள்ளவர்களா யிருந்தமையால் அதன் நாகரிகம் அபாயத்தில் இருக்கிறது. ஆனால், அதிர்ச்சியைத் தாங்குவதில் அதற்குள்ள திறமையைக் கொண்டு அதன் பலத்தை அறியவேண்டும். மேலும், இந்தியா முழுமையும் பாதிக்கப்படவில்லை. மேல்நாட்டு நாகரிகத்தில் அடிபட்டவர்கள் மட்டுமே அடிமைகளா யிருக்கிறார்கள். நமது அற்பமான முழக்கோலினால் நாம் உலகத்தை அளவு

பார்க்கிறோம். நாம் அடிமைகளா யிருக்கும்பொழுது உலகம் முழுமையும் அடிமையா யிருக்கிறதென்று நினைத்துக் கொள்கிறோம். நாம் இழிவான நிலையில் இருப்பதால் இந்தியா முழுமையும் அத்தகைய நிலையில் இருப்பதாக நாம் கருதுகிறோம். உண்மையில் அது அவ்வாறில்லை; ஆனால் நமது அடிமைத்தனத்தை இந்தியா முழுமைக்கும் கூறினாலும் பொருந்தும். மேற்கண்ட உண்மையை நாம் கருத்தில் வைத்துக் கொண்டால், நாம் விடுதலை பெற்றுவிட்டால், இந்தியா விடுதலை பெற்றுவிடு மென்பதை அறிந்துகொள்ளலாம். இந்தக் கருத்தில் சுயராஜ்யத்திற்கு இலக்கணம் நமக்குக் கிடைக்கிறது. நம்மை நாம் ஆள அறியும் பொழுது, அது சுயராஜ்யமாகும். எனவே, அது நமது உள்ளங்கையில் இருக்கிறது. இந்தச் சுயராஜ்யத்தைக் கனவென்று கருத வேண்டாம். அதனால், சும்மா இருக்கிறது என்ற கருத்தில்லை. உமக்கும் எனக்கும் நான் விளக்கிக் காட்ட விரும்பும் சுயராஜ்யத்தை நாம் ஒரு முறை உணர்ந்துகொண்ட பின், நமது வாழ்நாள் இறுதிவரை அவ்வாறே செய்யுமாறு மற்றவரைத் தூண்டுவோம். ஆனால், அத்தகைய சுயராஜ்யத்தை ஒவ்வொருவரும் தமக்குள் தமது சொந்த அனுபவத்தில் அறியவேண்டும். நீரில் மூழ்கிப்போகும் ஒருவன் மற்றொருவனை என்றும் காப்பாற்ற முடியாது: நாமே அடிமைகளா யிருக்க, மற்றவரை விடுவிக்க நினைப்பது நடிப்பேயாகும். ஆங்கிலேயரைத் துரத்துவதை நமது இலக்காகக் கொள்ள வேண்டியது அவசியமில்லை யென்பதைத் தாங்கள் இப்பொழுது அறிந்திருப்பீர்கள். ஆங்கிலேயர்கள் இந்தியர்களாய் விட்டால், நாம் அவர்களுக்கு இடம் கொடுக்கலாம். அவர்கள் தங்கள் நாகரிகத்துடனேயே, இந்தியாவில் இருக்க விரும்பினால், அவர்களுக்கு இடம் கிடையாது. இத்தகைய நிலைமையை ஏற்படுத்துவது நம்மைப் பொறுத்த வேலையாகும்.

கே: ஆங்கிலேயர்கள் எக்காலத்திலேனும், இந்தியர்களாவது முடியாத காரியம்.

ப: அவ்வாறு சொல்வது ஆங்கிலேயரிடம் மனித சுபாவம் இல்லை யென்று சொல்வது போலாகும். அவர்கள் அவ்வாறு ஆவார்களா, ஆக மாட்டார்களா என்பது உண்மையில் நமது காரியமல்ல. நாம் நமது வீட்டை ஒழுங்காய் வைத்துக் கொண்டால் அதில் வாழத் தகுதியுள்ளவர்களே இருப்பார்கள்; மற்றவர்கள் தாங்களாகவே, நம்மைவிட்டுப் போய்விடுவார்கள். இத்தகைய சம்பவங்கள் நம் அனைவர் அனுபவத்திலும் ஏற்படுகின்றன.

கே: ஆனால், அது சரித்திரத்தில் ஏற்படவில்லை.

ப: சரித்திரத்தில் ஏற்படாதது, இனி ஏற்படவே செய்யாதென்று கருதுவது மனிதனது மாட்சியில் நம்பிக்கையைக் குறைப்பதாகும். எவ்வாறிருப்பினும், நமது அறிவுக்குச் சரியென்று தோன்றுவதைச் செய்வது நமது கடமையாகும். எல்லாத் தேசங்களும் ஒரே நிலைமையுடன் இல்லை. இந்தியாவின் நிலைமை இணையற்றது. அதன் வன்மை அளப்பரியது. எனவே, நாம் மற்ற நாடுகளின் சரித்திரத்தைக் கவனிக்க வேண்டிய அவசியமில்லை. மற்ற நாகரிகங்களெல்

லாம் அழிந்துபோக, இந்திய நாகரிகம் அநேக அதிர்ச்சிகளைத் தாங்கி உயிருடன் விளங்குவதை நான் முன்னரே குறிப்பிட்டிருக்கிறேன்.

கே: நான் இதை ஒத்துக்கொள்ள முடியாது. ஆங்கிலேயர்களை நாம் ஆயுதபலத்தால் துரத்த வேண்டுமென்பதில் சிறிதும் சந்தேகமில்லை. அவர்கள் நம் நாட்டில் உள்ளவரை நாம் ஓய்வுடன் இருக்க முடியாது. அடிமைகள் கனவிலும் இன்பம் காணார் என்று நமது புலவர் ஒருவர் பாடியிருக்கிறார். ஆங்கிலேயர்கள் இருப்பதால் நாம் நாளுக்குநாள் பலவீனமாய்க் கொண்டு வருகிறோம். நமது பெருமை போய்விட்டது. நமது ஜனங்கள் பயந்த மனிதர்கள் போல விழிக்கிறார்கள். ஆங்கிலேயர் இந்த நாட்டில் ஒரு நோய் போல இருக்கிறார்கள். அதனை எந்த வகையிலும் நாம் ஒழிக்க வேண்டும்.

ப: உமது ஆவேசத்தில், நாம் சிந்தித்து வந்தவற்றையெல்லாம் நீர் மறந்துவிட்டீர். நாம் ஆங்கிலேயர்களை வரவழைத்தோம்; நாம் அவர்களை வைத்துக்கொண்டிருக்கிறோம். நாம் அவர்கள் நாகரிகத்தை மேற்கொள்வதால்தான் அவர்கள் இந்தியாவில் இருக்கவே முடிகிறதென்பதை நீர் ஏன் மறந்துவிடுகிறீர்? அவர்கள்மீது உமக்குள்ள பகைமையை அவர்கள் நாகரிகத்தின் மீது செலுத்தவேண்டும்.



**பெண் பேசும் போது:**—ஒரு பெண் உன்னிடம் பேசும்போது, அவள் கண்ணினால் என்ன சொல்லுகிறாள் என்பதையே நீ கவனிக்க வேண்டும்.

—விக்டர் ஹ்யூகோ.

## வாத்தியாரின் பிரம்புப் பஞ்சம்

"எங்கள் சம்பளத்தை உயர்த்தா விட்டால், வேலை நிறுத்தம் செய்து விடுவோம்" என்று, ஹாப்ளியில் உள்ள 30,000 வாத்தியார்கள் பயமுறுத்தி யிருக்கிறார்கள். அவர்களின் சம்பளத்தை உயர்த்துவது மிக்க அவசியம். உயர்த்தா விட்டால், 'நீ மூக்குப்பொடி வாங்கிவா', 'நீ, பட்சண பலகாரம் கொண்டுவா' என்றவாறு ஒவ்வொரு பையனை, வாத்தியார் கேட்டுத் தண்டிக்கொள்ள நேரும்.

என் வாத்தியாருக்கு ஒரு நாள் என்னிடம் கோபம் வந்தது. என்னை அடிக்க விரும்பினார். ஆனால், பிரம்பு இல்லை. பையன்களைப் பார்த்து, "உங்களில் யாராவது நாளைக்கு எனக்கு ஒரு பிரம்பு வாங்கிக்கொண்டு வந்து தாருங்கள்" என்று அவர் கட்டளை யிட்டார்.

மற்றப் பையன்களுக்கு என்னிடம் பயம். ஆகையால், பிரம்பு வாங்கிவர மறந்து விட்டார்கள். இந்தச் சிக்கலை நான் தீர்த்துவைத்தேன். கடமை தவறாத சிஷ்யனுக்கு அடையாளமாக, நானே ஒரு பிரம்பு வாங்கி வந்து வாத்தியாரிடம் சமர்ப்பித்தேன்!

—லைசென்ஸிடு லூனட்டிக், (இந்தியன் ரயில்வே மகஸீன்)

மகா சுலபம். சுருட்டுக் குடிப்பதை விடுவது மகா சுலபம். எனக்கு அது தெரியும். ஏனென்றால், நான் ஆயிரம் தடவை அதை விட்டிருக்கிறேன்.

—மார்க் டிவேன், (க்ாரனெட்)

# இந்திய சுய நிர்ணய சபை

மைக்கேல் காரிட்

இந்தியா சம்பந்தமாகப் பிரிட்டன் மேற்கொண்ட கொள்கை, யுத்த முயற்சியைப் பெரிதும் பாதிக்கிறது என்று கருதின அமெரிக்கர்களும், ஏனைய நேச நாட்டினரும் இந்தக் கொள்கையைக் கண்டித்து யுத்தகாலத்தில் பெரும் கிளர்ச்சி செய்தனர். இந்தியத் தலைவர்களைச் சிறையிலிட்டதும், போலீசாரின் மிருகத்தனமான அடக்கு முறையும், முட்டுக் கட்டையை நீடிக்க வேண்டுமென்ற பிடிவாதமான போக்கும் ஜப்பானுக்கு எதிராக இந்தியர்களையும், இந்தியாவின் சக்திகளையும் ஒன்று திரட்டுவதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கவில்லை; ஆனால், தேசிய இயக்கத்தை நசுக்குவதை நோக்கமாகக் கொண்டிருந்தன.

அதிகார வர்க்க ஆட்சி திறமையற்றது, தாறுமாறானது என்பதைப் பொருளாதாரத் துறையில் ஏற்பட்ட சீர்குலைவு நிரூபித்தது. நினைக்க முடியாத அளவுக்குப் பணவீக்கம், விஷம்போல் ஏறும் விலைவாசி, தன்னரசு செலுத்தும் கள்ள மார்க்கெட்டு முதலியன தடுக்கப் படவில்லை. கள்ள மார்க்கெட்டுக் காரர்களுடனும், கொள்ளைச் சேமிப்பாளர்களுடனும் சர்க்கார் நெருங்கின அரசியல் தொடர்பு வைத்திருந்தது. எனவே, இந்தியாவைப் பலஹீனப் படுத்தின நிராதரவான நிலைக்கு இழுத்துச் சென்ற—மிகப் பெரிய பஞ்சத்தைத் தடுக்க ரேஷனிங் முறையையோ, விலை நிர்ணய முறையையோ சர்க்கார் அமுலுக்குக் கொண்டு வரவில்லை; இவைகளைச் செய்ய அது சக்தியற்றிருந்தது.

இந்தியத் தலைவர்களைச் சிறுமைப் படுத்தவும், ஜப்பானுக்குச் சாதக மானவர்களாக அவர்களைச் சித்தரிக்கவும், பஞ்சத்தின் பொறுப்பை இந்தியர்கள் தலையில் சுமத்தவும் அதிகாரிகள் 'பகீரதப் பிரயத்தனம்' செய்தனர். ஆனால் இங்கிலாந்திலோ, அமெரிக்காவிலோ ஜனங்கள் இந்தப் பிரசாரத்தால் மயங்கிவிடவில்லை. தலைவர்களை விடுதலை செய்யவேண்டும், தற்காலிக தேசிய சர்க்காரை உடனே அமைக்க வேண்டும் என்னும் ஜனங்களின் கோரிக்கைகளுக்கு அமெரிக்காவிலும், இங்கிலாந்திலும் பேராதரவு கிடைத்தது. தற்காலிக தேசிய சர்க்கார் போதிய அளவு பிரதிநிதித்துவம் உடையதாகவும், பொறுப்புடையதாகவும் இருந்தால் லட்சக் கணக்கான இந்தியர்களைத் தேசிய யுத்த முயற்சிக்குச் சாதகமாக அது திரட்டியிருக்கும்; இந்தியாவின் சக்திகளை யுத்தத்தின் ஒரு பகுதியாகத் திரட்டியிருக்கும்; உணவு நெருக்கடியைச் சமாளிக்க அவசியமான நடவடிக்கைகளுக்கு அது பொது

*இந்திய அரசியலை இந்தியரே வகுத்துக் கொள்ள வேண்டும். இதை இப்போது எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். அப்படி வகுத்துக் கொள்வதென்றால், ஜனப்பிரதிநித்துவம் கொண்ட ஒரு சுய நிர்ணய சபை அமையவேண்டும். அதை எப்படி அமைப்பது? இதைப் பிரிட்டிஷ் தீவிர வாதிகளின் பத்திரிகையான 'லேபர் மன்த்லி' யில், கட்டுரையாளர் விளக்கியிருக்கிறார். தோழர் ஆர். ராமநாதன் இங்கே மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார்.*

ஜன ஆதரவைத் திரட்டியிருக்கும்.

யுத்தம் முடிந்த பிறகு, ஜப்பானியரிடமிருந்து தூரக் கிழக்கு நாடுகள் விடுவிக்கப்பட்ட பிறகு இந்தியாவின் எதிர்காலம் சர்வ தேசப் பிரச்சினையாக உருவெடுத்திருக்கிறது. இந்தியா பலாத்காரமாக அடிமைக் கடலில் ஆழ்த்தி வைக்கப்பட்டிருக்கும் வரையில்—அன்னிய நாட்டு முதலாளிகளால் இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி தடுக்கப்படும் வரையில்—தூரக் கிழக்கு நாடுகளிலோ, அல்லது உலகத்திலோ சமாதானமோ, சுபிட்சமோ நிலைக்க முடியாது.

தொழிற் கட்சி சர்க்கார் பெரும்பான்மையான வாக்காளர்களின் ஆதரவைப் பெற்றதாக இருப்பதால் இந்தியப் 'பிரச்சினையை' நிரந்தரமாகத் தீர்க்க அதற்குப் புதிய வசதியும், சந்தர்ப்பமும் கிடைத்திருக்கின்றன. டோரிகளின் இந்தியக் கொள்கை (அதன் பிரதான பாஷ்யக்காரர் அமெரியின் போக்கு உள்பட) முடிவாக நிராகரிக்கப்பட்டு விட்டது. தொழிற் சங்க இயக்கம் - இன்று தொழிற் கட்சி சர்க்கார் அதிகாரத்தில் இருக்கிறது - இந்திய அரசியல் முட்டுக் கட்டையை ஜனநாயக ரீதியில் தீர்க்கவேண்டுமென்று தெளிவாகக் கூறுகிறது. எனவே இன்று தொழிற் சங்க இயக்கத்திற்கும், தொழிற் கட்சி சர்க்காருக்கும் பெரும் பொறுப்பு இருக்கிறது ; இந்தப் பொறுப்பை நிறைவேற்ற இதுவரையில் கிடைக்காத அவ்வளவு வசதியும் கிடைத்திருக்கிறது.

பரிகார மார்க்கம் ஜனநாயக ரீதியானதாகவும், நீடித்து நிற்கக் கூடியதாகவும் இருக்கவேண்டும். தற்காலிகமான அரைகுறைச் சமரசம் பிரச்சினையைத் தீர்த்து விடாது. உண்மையான சமரசத்தின் ஜீவநாடி, ஜனநாயக சுயநிர்ணய சபைதான். இந்தியாவின் தேசிய ஆதர்சங்களுக்கும், பரிபூரண சுதந்தரம் வேண்டும் என்ற கோரிக்கைக்கும் உகந்த முறையில் எதிர்கால அரசியல் அமைப்பைச் சுயேச்சையாக வகுத்துக் கொள்ள இந்தச் சபைக்கு உரிமை இருக்க வேண்டும்.

துரதிர்ஷ்டவசமாகச் செப்டம்பர் மாதம் பத்தொன்பதாம் தேதி ஆட்லி விடுத்த அறிக்கை இந்தத் தன்மை உடையதல்ல. இதை இந்தியாவில் யாரும் உற்சாகத்துடன் வரவேற்கவும் இல்லை. 1942-ஆம் வருடத்திய சர்வதேச நிலையை அடிப்படையாகக் கொண்டு பிறந்த, இந்தியாவிலுள்ள சகல அரசியல் கட்சிகளாலும் நிராகரிக்கப்பட்ட, கிரிப்ஸ் திட்டத்தின் அடிப்படையில் பிறந்தது, ஆட்லியின் அறிக்கை. ஆனால், இன்றைய நிலை அன்றைய நிலைக்கு முற்றிலும் மாறுபட்டது என்பது உணரப்படவில்லை. தொழிற் கட்சிக்கு வெற்றி உண்டான சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்வதைப்பற்றி அந்தக் கட்சி சர்க்கார் சிந்தனைகூடச் செய்யவில்லை; தேசிய சர்க்காரின் கொள்கைக்கு முற்றுப் புள்ளி வைக்கவில்லை என்பதைத்தான் சர்க்காரின் இந்தக் கொள்கை அறிவுறுத்துகிறது. தனது எதிர்காலத்தைச் சுயேச்சையாக நிர்ணயித்துக் கொள்ள இந்தியாவுக்கு எத்தகைய அரசியல் அமைப்பு வேண்டும் என்பதைத் தெளிவு படுத்தும் வேலையில் தொழிற் கட்சி சர்க்கார் வெற்றி பெறவில்லை. அது தெளிவற்ற

தாகவும், தயக்க முடையதாக வும் இருந்தது. 'சட்டமியற்றும் சபையை' அபிவிருத்தி செய்ய, அதிக ஜனநாயகமானதாக்க, யோசனை கூற அது இடமளித்தது என்பது மாத்திரம்தான் அதிலிருந்த ஓரே நல்ல அம்சம.

ஆகவே, தங்கள் எதிர் காலத்தை நிர்ணயித்துக் கொள்ள இந்தியர்களுக்கு உரிமை அளிக்கும் சுய நிர்ணய சபை ஒன்று ஏற்படுத்த வேண்டும். அதற்கான திட்டத்தை அங்கீகரிக்கும் படி, சர்க்காரை நிர்ப்பந்தப் படுத்தும் பெரும் பொறுப்பு, பிரிட்டிஷ் ஜனங்களுக்கு ஏற்பட் டிருக்கிறது.

சுய நிர்ணய சபை கீழ்க் கண்ட குணங்களைத் தன்னுள் கொண்டதாக இருக்க வேண்டும்.

1. சுய நிர்ணய சபை: இதன் அங்கத்தினர்கள் வயது வந்தவர்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். தாமதத்தைத் தடுப்பதற்காக, மாகாணத் தேர்தல்களை இன்றுள்ள குறுகின தேர்தல் முறைப்படி நடத்த வேண்டியிருந்தால்கூட, சுய நிர்ணய ச்பைத் தேர்தலுக்குப் புதிய ஓட்டர் ஜாபிதா உடனே தயாரிக்கப்பட வேண்டும்.

2. சுய நிர்ணய சபைக்கு நேரடியான தேர்தல் முறையை அனுஷ்டிக்க வேண்டும். மாகாணச் சட்ட சபைகளைத் "தேர்தல் காலேஜுகளாக" உபயோகிக்க வேண்டுமென்ற யோசனை ஜனங்களின் கருத்தை வெளியிட உதவி புரியாது; ஆனல் இது பல்வேறு விசேஷ உரிமைகள் படைத்தவர்களைத் தாங்கும் நிலைமையைத் தான் உண்டு பண்ணும்.

3. பிரிட்டிஷ் இந்தியாவில் தேர்தல் எவ்வளவு ஜனநாயக ரீதியானதாக இருக்க வேண்டுமோ, அதைப் போன்று இந்திய சமஸ்தானங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளும் ஜனநாயக ரீதியில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். ஜனநாயக அம்சம் மருந்துக்குக் கூட இல்லாத மத்திய கால மன்னர்கள் பிரதிநிதிகளை நியமிக்கும் முறைக்கு முடிவாக முற்றுப் புள்ளி வைத்துவிட வேண்டும்.

4. சட்டசபை உண்மையான சுய நிர்ணய சபையாக இருக்க வேண்டுமே தவிர, பிரிட்டிஷ் சர்க்காருக்குச் சிபார்சுசெய்யும்-இந்தச் சிபார்சை அது அங்கீகரிக்கலாம், அல்லது நிராகரிக்கலாம்-வெறும் "சட்ட மியற்றும் சபையாக" மாத்திரம் இருத்தல் கூடாது. சுயேச்சையான சுய நிர்ணய சபையின் பொறுப்புகளில் ஒன்று, பிரிட்டனுடன் சுயேச்சையாக ஓர் ஒப்பந்தம் செய்து கொள்வது. புதிய சட்டம் இயற்றப்படுமுன் கொள்ளப்படும் பொருளாதார, செல்வ முடிவுகளும், இந்த இரண்டையும் தன்னுள்கொண்ட ஒப்பந்தங்களும் இந்தியாவின் எதிர்காலப் பொருளாதாரச் சுதந்தரத்தைப் பெரிதும் பாதிக்கும் என்னும் பயம் இந்தியர்களிடையே வேரூன்றி யிருக்கிறது. இந்தப் பயம் எவ்வளவு நியாயமானது என்பதற்கு, ஸ்டர்லிங் கடனை முழுதும் ரத்து செய்து விட வேண்டும், அல்லது குறைக்க வேண்டும் என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் செய்யும் கிளர்ச்சியே போதுமான சான்ருகும்.

இதற்கிடையில், சுய நிர்ணய சபை கூட்டப்படும் வரையில், அரசியல் முட்டுக் கட்டையை

உடைப்பதற்காக இன்று சர்க்கார் என்ன நினைக்கிறதோ, அதைவிட அதிகமாக முன்னே செல்ல வேண்டும். மாகாணத் தேர்தல்கள் நடைபெற வேண்டும்.....ஆனால், அவை சுயேச்சையாக நடக்க வேண்டும். இதற்கு முதல் படியாக, தண்டனை அடைந்தீ, அல்லது விசாரணையின்றிக் காவலில் வைக்கப்பட்டிருக்கும் அரசியல் கைதிகள் உடனே விடுதலை செய்யப் படவேண்டும்; கூட்டங்களுக்கும், தனிப்பட்டவர்களின் நடமாட்டத்திற்கும் விதிக்கப்பட்டிருக்கும் தடைகள் ரத்து செய்யப்படவேண்டும். பத்திரிகைகளுக்கு விதிக்கப்பட்டிருக்கும் நிபந்தனைகள் நீக்கப்பட வேண்டும். மத்திய ஐரோப்பிய நாடுகளில் தேர்தல்கள் தடையற்ற, ஜனநாயகச் சுற்றுச் சார்புகளில் நடைபெற வேண்டும் என்று விரும்புகிற நாம், இந்தியாவிலும் இந்த நிலை ஏற்பட வேண்டும் என்று வலியுறுத்துவது அவசியமல்லவா?

மேலும், தேர்தலுக்கு முந்தின நெருக்கடியான காலத்தில் நிர்வாகத்தை, மாகாணத்திலும், மத்தியிலும் ஜனங்களின் தற்காலிக சர்க்கார் ஏற்கவேண்டும் என்பதை ஐரோப்பிய அனுபவம் அறிவுறுத்துகிறது. அரசியல் கட்சிகளை வெறுப்பதையும், அடக்குமுறையையும் பரம்பரையாகக்கொண்ட இந்திய அதிகார வர்க்கம், தேர்தல் ஜாப்தாவை நியாயமாகத் தயாரிக்குமென்றோ, அல்லது கடந்த கால அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டு நிலைமையைப் பரிசீலனை செய்யும் பொழுது வரும் சரத்காலத்தில் ஏற்படக்கூடிய பஞ்சத்தையும், பண வீக்கத்தையும் சமாளிக்க அதற்குத் திறமை இருக்கிறது என்றோ நம்பச் சிறிதும் ஆதாரமில்லை. தேர்தல் முடிந்த பிறகுதான், 'முக்கிய அரசியல் கட்சிகளின் ஒத்துழைப்புடன்' வைசிராயின் நிர்வாக சபையைத் திருத்தி அமைக்கத் திட்டமிடப் பட்டிருக்கிறது. இது கூடத் தெளிவாகச் சொல்லப்படவில்லை. புதிய சபை எவ்வளவு பிரதிநிதித்துவம் வாய்ந்ததாகவும், பொறுப்புடையதாகவும் இருக்கும் என்னும் முக்கியமான விஷயத்தைத் தட்டிக்கழிக்கக் கையாளப்பட்ட தந்திரம் இது. அதிவிரைவாக மோசமாகி வரும் அரசியல் சுற்றுச் சார்பிலே இந்தப் போக்கு முட்டுக்கட்டையைத் தகர்க்கத் தவறுகிறது!

காங்கிரஸ்—லீக் சட்ட சபைக் கட்சித் தலைவர்களால் (தேசாய்—லியாகத் ஒப்பந்தம்) ஒப்புக்கொள்ளப் பட்ட—காந்திஜியால் அதிகாரப் பற்றற்ற முறையில் அங்கீகரிக்கப்பட்ட—காங்கிரஸ்-லீக் சமப் பிரதிநிதித்துவம் என்னும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு மத்தியில் தற்காலிக தேசிய சர்க்கார் அமைக்கவேண்டும்.

பதவியை விட்டு வெளியேறுமுன் இந்தியாவில் வளர்ந்துவரும் காங்கிரஸ்—லீக் ஒற்றுமையைக் குலைக்கவும், பிரச்சினைகளை மழுப்பிக் குழப்பவும் அமெரி கையாண்ட தந்திரம் உலகறிந்த உண்மை. ஹிந்து—முஸ்லிம் சமப் பிரதிநிதித்துவம் என்னும் ஆத்திர மூட்டும் தத்துவத்தைப் புகுத்தி அவர் சிம்லா மகாநாடு முறிய வழி கோலினார். அவர் விரித்த வலையில் காங்கிரஸ் தலைவர்களும், லீக் தலைவர்களும் விழுந்தனர். தாங்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தை நிராகரித்துவிட்டு அவர்கள் இந்தப்

புதிய சுலோகத்தை அங்கீகரித்தனர். இந்தியாவின் கோரிக்கையை ஒன்று சேர்ந்து வலியுறுத்த ஒன்றுபட்டு நிற்பதற்குப் பதிலாக இரண்டு கட்சிகளும் வைசிராயைத் தத்தம் பக்கம் இழுக்க முயன்றன. எனவே, முந்திச் செயலாற்றும் பொறுப்பு வைசிராயிடம் விடப்பட்டது. தீமை நிறைந்த உள்நாட்டுக் குழப்பத்தைத் தூண்டிவிடும் அளவுக்கு இரு கட்சிகளின் தலைவர்களும் சென்றுவிட்டார்கள் என்ற முடிவுக்கு ஒருவர் வர முடியும், தலைவர்களின் அறிக்கைகளைக் கூர்ந்து கவனித்தால்.

இன்று இந்தியாவில் குடிகொண்டிருக்கும் நிலையால் நன்மை அடைகிறவர்கள் ஏகாதிபத்திய வாதிகள்தான். அவர்கள் திறமையுடன் மேற்கொண்ட கொள்கையின் விளைவு இது. அவர்கள் சாமர்த்தியத்துடன் இந்தக் கொள்கையைத் தொழிற் கட்சி சர்க்காருக்குப் பிதுரார்ஜிதமாக அளித்திருக்கிறார்கள். அவர்கள் சார்பில், ஜனநாயக எதிர்ப்புப் பரம்பரையில் ஊறின இந்திய அதிகார வர்க்கம்,இந்தக் கொள்கையைப் பக்தி சிரத்தையுடன் அனுஷ்டிக்கிறது. இந்த நிலையில் தன் முன்னோர்களின் கொள்கையை மரியாதையான வார்த்தைகளுடன் அமுலுக்குக் கொண்டு வருவதுதான் தொழிற் கட்சி சர்க்காரின் நோக்கமென்றால், இதன் விளைவு பயங்கரமானதாக இருக்கும். இந்தியா விஷயத்தில் ஆட்லி—வேவல் திட்டங்கள் தான் முடிவானவை என்பதை நாம் அங்கீகரித்தால், எதிர்காலம் முதல் தரமான ஆபத்துகள் நிறைந்ததாக இருக்கும். சோர்வும், கசப்பும் அடைந்த — அதிகாரமற்ற — இந்திய அரசியல் கட்சிகள், உள்நாட்டுப் பிரச்சினைகளைத் தீர்க்க, சமூகக் கலகம் என்னும் பலனற்ற பாதையில் உந்தப்படும். அதே சமயத்தில் முட்டுக்கட்டை இந்தியர்களின் தனிப்பட்ட விஷயம் என்று எழுதி, பிரிட்டிஷ் பத்திரிகைகள் தம் கைகளைக் கழுவிவிடும்.

சிறுபான்மையோரின் கோரிக்கைகளை அங்கீகரிப்பதும், பாகிஸ்தான் விஷயமும் இந்தியர்களால் தீர்க்கப்பட வேண்டியவை என்பது உண்மைதான். ஆனால், அங்கே ஒப்பந்தம் ஏற்படவில்லை என்பதற்காக அரசியல் வளர்ச்சியைத் தடுத்து நிறுத்துவது பெரும் தவறு. உண்மையில் சுதந்தர, ஜனநாயகச் சூழ்நிலையின்றி சார்பில்தான், குறுகின எண்ணம் படைத்த பல்வேறு கூட்டங்களின் விதண்டா வாதத்திற்குச் செவி சாய்க்கத் தயாராக இருக்கும் ஒரு வைசிராய் இல்லாத நிலையில் மாத்திரம்தான், இந்தப் பிரச்சினை தீரும்.

இந்தக் கஷ்டமான காலத்தில் இந்தியாவில் தேசிய ஒற்றுமை ஏற்பட முன்னணியில் நின்று இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி பாடுபடுகிறது. முஸ்லிம்களின் சுய நிர்ணய உரிமைக் கோரிக்கையை அங்கீகரிப்பதன் மூலம் காங்கிரஸ்—லீக் ஒற்றுமையை உண்டுபண்ண முடியுமென்பதையும் கம்யூனிஸ்டுக் கட்சி எடுத்துக் காட்டுகிறது.

தொடர்ந்த அடக்குமுறையால் ஒற்றுமையின்மையும், சோர்வு மனப்பான்மையும் இந்தியாவில் இன்று குடிகொண்டிருக்கின்றன. 1942-ம் வருடம் நடந்த போராட்டத்திலும், அழிவு வேலையிலும் கம்யூனிஸ்டுகள் கலந்து கொள்ளவில்லை என்ற

அடிப்படையில் காங்கிரஸ் தலைவர்கள் கம்யூனிஸ்டுகளை ஏசிப் பழிக்கும் துரதிர்ஷ்டகரமான நிலையை இந்த ஒற்றுமையின்மையும், சோர்வு மனப்பான்மையும் உண்டுபண்ணியிருக்கின்றன.

இந்திய தேசிய இயக்கத்திற்குள் ஏற்பட்டிருக்கும் ஒற்றுமையின்மையால் லாபமடைகிறவர்கள், ஏகாதிபத்திய வாதிகள் தான். இந்தியாவில் சோர்வையும், ஒற்றுமையின்மையையும் உண்டுபண்ணின பழைய கொள்கைக்கு விடை கொடுக்கவேண்டிய பெரும் பொறுப்பு, தொழிற்கட்சி சர்க்காரைச் சார்ந்தது.

மேலே கூறின முறையில் உண்மையான ஜனநாயக சுய நிர்ணய சபை கூட்டப்பட்டால் தான், தங்கள் எதிர்காலத்தை நிர்ணயித்துக் கொள்ளவும், இந்திய, அன்னிய நாட்டு முதலாளிகளின் சுரண்டலிலிருந்து தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் உழைக்கும் வர்க்கத்திற்கு வசதி ஏற்படும். மேலும், ஜனநாயகத்தின்மீது பிரிட்டிஷ் மக்களுக்குள்ள பற்று, அப்பழுக்கற்றது; மத்திய ஐரோப்பாவிலும், பால்கன் நாடுகளிலும் ஜனங்கள் புதிதாக வென்ற சுதந்தரத்தைக் குறை கூற இது ஒரு குறையல்ல, என்பதை அப்பொழுது தான் உலகம் உணரும்.



## ஆண்டவனே அறிவான்!

"நீங்கள் ஏன் இன்னும் உங்கள் ஊருக்குப் போகவில்லை?" என்று, ஓர் அமெரிக்க ஸோல்ஜரை நான் கேட்டேன்.

"ஆண்டவனே அறிவான்" என்று அவன் பதில் சொன்னான்.

யுத்தம் முடிந்து விட்டது ஜப்பானியரை அமுக்கியாயிற்று. மிக்காடோவைக் கிளப்பி, மக்கார்த்தர் ஸ்தாபிதமாகி விட்டார். பர்மாவை 'விடுவித்'து, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்குள் சேர்த்தாயிற்று. அமெரிக்க ஸோல்ஜர் மட்டும் இன்னும் ஊருக்குப் போகவில்லை. ஏன்?

கப்பல் கிடைக்காததே காரணம் என்கிறார்கள். மிஞ்சியுள்ள அமெரிக்க சாமான்களைப் பைசல் செய்யவே தங்கியிருக்கிறார்கள் என்கிறார்கள். இதையெல்லாம் யாரும் நம்பவில்லை. ஆனால், எங்கும் ஒரு வதந்தி கிளம்பியிருக்கிறது. "இந்தியச் சுதேசிகள் கலகம் செய்வார்கள்போலிருக்கிறது. பிரிட்டிஷாரின் தாயாதிகளான அமெரிக்கர்கள், அப்போது பிரிட்டனுக்கு உதவி செய்வது கடமையல்லவா? அதற்காகவே அவர்கள் இருக்கிறார்கள்" என்பதுதான் வதந்தி.

"இந்தியாவிலே கலகம் வரப்போகிறதாமே; உண்மையா?" என்று என்னைக் கேட்டான் அந்த அமெரிக்கன்.

"ஆண்டவனே அறிவான்" என்று நான் சொன்னேன்.

—'கிரானிக்ளர்' (பம்பாய்க் கிரானிகிள்)

## பக்தியும் ஞானமும்

பக்தி அதிகரிக்க அதிகரிக்க ஈசுவர ஞானமும் அதிகரிக்கும். பக்தி அற்பமாக இருக்குமிடத்தில் ஞானம் அதிகமாக இருக்குமென்று எதிர்பார்ப்பது வீண்.

—ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர்.

# பாரதி நினைவு - முதல் சந்திப்பு

பரலி—சு. நெல்லையப்பர்

1908-ம் ஆண்டென்று நினைக்கிறேன். இற்றைக்கு முப்பத்தாறு ஆண்டுகளுக்கு முன்னே, தூத்துக்குடியில் தேசபக்தர் - திருவாளர் சிதம்பரம் பிள்ளையவர்கள் தலைமையில் நடந்து வந்த சுதேசிக் கப்பற் கம்பெனியில் நான் ஒரு சிறிய குமாஸ்தாவாகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். எனது தமையனார் 'வந்தே மாதரம்' ஷண்முக சுந்தரம் பிள்ளை - மேற்படி கப்பற் கம்பெனியின் (ஏஜண்டு) பிரதிநிதிகளில் ஒருவராகச் சோழ நாட்டில் ஊர் ஊராகச் சுற்றிக் கம்பெனிக்குப் பங்கு சேர்த்துப் பெருந் தொண்டு செய்துகொண்டிருந்தவர், தூத்துக்குடிக்கு வந்திருந்தார். காலஞ் சென்ற எனது அருமைத் தம்பி குழந்தைவேலன்—அவன் தான் சிதம்பரம் பிள்ளையவர்கள் பெருந் தொடர்பை நான் பெறுவதற்கும், அதன் வாயிலாக நான் எனது வாழ்நாளில் இளமையில் ஒரு புதிய மாறுதல் பெறுவதற்கும் காரணமாயிருந்தவன்—பிள்ளையவர்கள் அணுக்கத் தொண்டனாய் அவர்களுடனே யிருந்தான். நாங்கள் மூவரும் விடுதிகளில் உணவு கொண்டிருந்த போதிலும் பகற் பொழுதில் ஓய்வு நேரங்களைப் பிள்ளையவர்கள் வீட்டிலேயே கழிப்பது வழக்கம். இராப்பொழுதில் சிவன் கோயில் தெருவிலிருந்த பிள்ளையவர்கள் வீட்டுப் பெருந் திண்ணையிலே படுத்துறங்குவது வழக்கம்.

ஒரு நாள் காலை பத்து மணியிருக்கலாம். பிள்ளையவர்கள் வீட்டின் முன்பகுதியில் நான் வழக்கமா யிருக்கும் அறையில் இருந்துகொண்டிருந்தேன். அப்போது ஒருவர் அங்கே வந்து எதிர்பாராத முறையில் எனது கையைப் பற்றி என்னை வெளியே உலாவுவதற்கு அழைத்துக் கொண்டு போனார். அவர் தான் பாரதியார். அவரை எனக்கு முன்னே தெரியாது. பாரதியார் பாடிய சுதேச கீதத் துண்டுப் பிரசுரங்கள் எனது அறையில் ஏராளமாகக் கிடந்தன. இளம் பச்சைக் காகிதத்தில் நாலே பக்கம் அழகாக அச்சிடப் பட்டிருந்த அந்தப் பிரசுரத்தில் "வந்தே மாதரம் என்போம்," "ஜய ஜய பாரத," "எந்தையும் தாயும்," "வாழிய செந்தமிழ்" என்னும் நான்கு சிறந்த பாடற்றொகுதிகள் அடங்கி யிருந்தன. அந்த அற்புதமான பாடல்களை முதல் முறை படித்த நான், புத்துயிர் பெற்றிருந்தேன். காலஞ் சென்ற திருமயிலைச் செல்வர் வெ. கிருஷ்ணசுவாமி ஐயர் அந்தப் பாடல்களைப் பாரதியார் வாயினாலேயே பாடக் கேட்டு வியப்பும் உவப்பும் அடைந்தவராய், அவற்றைப் பதினாயிரக்

'பாரதியாரை எனக்குத் தெரியும்; எனக்குத் தெரியும்' என்று இன்று நூற்றுக் கணக்கான பேர் பெருமை பேசிக்கொள்கிறார்கள். அதில் எல்லாம் எவ்வளவு உண்மை என்பதை ஆண்டவனே அறிவான். ஆனால், 'லோகோபகாரி' என்ற சிறந்த வாரப் பத்திரிகையை நடத்திப் புகழ் பெற்ற பரலி-சு. நெல்லையப்பர், பாரதியாரோடு நெருங்கிப் பழகியவர். பாரதியார் பாட்டுகளை ஆரம்ப காலத்தில் அச்சிட்டு வெளியிட்டுப் பரப்பியவர். அவர் எழுதி வரும் ஒரு புத்தகத்தின் முதல் அத்தியாயம் இது.

கணக்கில் அச்சிட்டுச் சிறப்பாகப் பள்ளிக் கூடங்களில் பரப்பும்படி ஏற்பாடு செய்திருந்தார் என்ற செய்தியைப் பின்னர் அறியலானேன்.

'இந்தியா' என்ற (தமிழ்) வாரப் பத்திரிகையும் அந்தக் காலத்தில் சிதம்பரம் பிள்ளை வீட்டிற்கு வரும். அது புதுமையான முறையில் நடந்து வந்தது. பாரதியார் தான் அதன் ஆசிரியரா யிருந்தார். தமிழ்ப் பத்திரிகை யுலகில் அது ஒரு புதிய காலத்தைத் தொடங்கிய தென்று சொல்ல வேண்டும். 'இந்தியா' பத்திரிகையின் ஆசிரியரும், சுதேச கீதங்களின் ஆசிரியருமான சுப்பிரமணிய பாரதியார் அவர் என்று தெரிந்த பொழுது நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்.

அன்று நான் கண்ட பாரதியாரின் கோலம் எனக்கு இன்னும் நினைவில் இருக்கிறது. வயது சுமார் இருபத்தைந் திருக்கலாம். ஆறு முழச் சுதேசி வேட்டியைத் தார்ப் பாய்ச்சி உடுத்தி யிருந்தார். (கதர் அப்பொழுது தோன்ற வில்லை. தென் ஆப்பிரிக்காவில் இருந்த காந்தியடிகள் உள்ளக் கருவில் இருந்தது.) சட்டையும், கோட்டும் போட்டிருந்தார். கிராப் தலையைச் சீவி விட்டிருந்தார். அகன்ற, நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டு. அறிவொளி வீசும் முகம்; அன்பு நிலவும் விழிகள். கழுத்திலே தூய வெண்மையும் இளஞ் சிவப்பும் கலந்த பட்டு அங்க வஸ்திரம். அந்த அங்க வஸ்திரத்தை நான் எந்நாளும் மறக்க முடியாது. பிற்காலத்தில் நெடு நாள் வரை புதுவையிலும் பாரதியார் கழுத்தை அந்த அங்க வஸ்திரம் அழகு செய்து வந்தது.

தூத்துக்குடியில் முடி சூடா மன்னராக விளங்கிய சிதம்பரம் பிள்ளை மீதும், சுப்பிரமணிய சிவா, பத்மநாப ஐயங்கார் இருவர் மீதும் திருநெல்வேலியில் ஜாமீன் வழக்கு ஏற்பட் டிருந்தது. பின்னர் அது பிள்ளை மீதும் சிவா மீதும் ராஜத்துவேஷ வழக்காக மாறியது. சிதம்பரம் பிள்ளையையும் அவர் நண்பர்களையும் பார்ப்பதற்காகப் பாரதியாரும் வேறு சில நண்பர்களும் திருநெல்வேலிக்கு வந்திருந்தார்கள். பாளையங் கோட்டைச் சிறைக் கோட்டத்தில் இருந்த மூவரையும் கண்டு உரையாடினர். ஜில்லாக் கலெக்டர் எல். எம். விஞ்சு துரையின் அடக்கு முறையினால் கலக்க முற்றிருந்த திருநெல்வேலியையும் தூத்துக்குடியையும் நேரில் கண்டு நிலைமையை அறிந்து கொள்வது பாரதியார் நோக்கமா யிருந்தது. சிதம்பரனார் முதலிய மூவர் மீதும் ஏற்பட்ட வழக்கில் அவர்களுக்காகத் தோன்றிய திருநெல்வேலி நியாய வாதிகளான சாது கணபதி பந்தலு, கணபதி ராமையர், டி. வி. கிருஷ்ணசாமி ஐயர், ஸ்ரீவைகுண்டம் தி. ரா. மகாதேவ ஐயர், சிவராம கிருஷ்ண ஐயர் முதலிய தேச பக்த நண்பர்களுடன் திருநெல்வேலி வீரராகவ புரத்தில் இந்துக் கல்லூரிக்கு அருகில் இருந்த சாது கணபதி ஆபீஸ் மேடையில் பாரதியாரும் அவர் நண்பர்களும் ஒரு வாரம்வரை தங்கியிருந்தார்கள். சிதம்பரனார் வழக்கு விஷயங்களைப் பற்றிப் பேசியும், பாட்டுப் பாடியும் பாரதியும் அவர் நண்பர்களும் காலம் கழித்துச் சென்றார்கள். இந்தத் தருணத்தில்தான் பாரதியார் கலெக்டர் விஞ்சுக்கும் சிதம்பரம் பிள்ளைக்கும் நடந்த வாக்கு வாதமாக

நாட்டில் எங்கும் சுதந்தர
வாஞ்சையை, நாட்டிஞய்
கனல் மூட்டிஞய்

என்று தொடங்கும் பாடல்களை யும்,

சொந்த நாட்டில் பிறர்க்
கடிமை செய்தே துஞ்சிடோம்
இனி அஞ்சிடோம்

என்று தொடங்கும் பாடல்களை யும் பாடிஞரென்று பின்னர் அறிந்தேன்.

பாரதியார், திருநெல்வேலிக்கு வந்ததை யொட்டித் திருவாளர் சிதம்பரம் பிள்ளையின் முயற்சிகளுக் கெல்லாம் நிலைக்களஞக விளங்கித் தென்னுட்டுப் பாரிஸா லென்று பேர் பெற்றிருந்த தூத்துக்குடிக்கும் வந்தார். காலையில் சிதம்பரஞர் வீட்டில் தங்கி யிருந்த பாரதியார் மாலையிலேயே திருநெல்வேலிக்குத் திரும்பி விட்டதாக அறிந்தேன். காலையில் என்னைக் கைப் பற்றிய பாரதியார் என்னிடம் அதிகமாக ஒன்றும் பேசவில்லை. திருநெல்வேலிக்குத் திரும்பிப் போகும் பொழுது என்னிடம் சொல்லிக்கொண்டு போகவும் இல்லை.

*

## தேசம் பெரிசா, மனைவி பெரிசா?

ஒரு படையின் ஸோல்ஜர்களெல்லாம் ஏற்கெனவே மிக அதிகமாய் ரஜா எடுத்துக்கொண்டு விட்டார்கள். இந்த நிலைமையில், மிக்க அனுசிதமாக ஒரு ஸோல்ஜர் ரஜா கேட்டான். "வீட்டிலே என் மனைவிக்கு என் துணை உடனே தேவையா யிருக்கிறது" என்று சொல்லி, தன் படை அதிகாரியை அவன் கெஞ்சிஞன்.

அதிகாரிக்கு இவன் தொல்லை பொறுக்க முடியவில்லை. அவர் எரிச்சலோடு, "உன் நாட்டுக்குச் செய்யவேண்டிய கடமையைவிட, உன் மனைவியையே பெரிசாய் நினைக்கிருயா?" என்று கேட்டார்.

ஸோல்ஜர் சொன்னன்: "என் நாட்டைக் காக்க ஒரு கோடியே பத்து லட்சம் பேர் இருக்கிருர்கள். என் மனைவியைக் காக்கவோ, நான் ஒருவன் தான் இருக்கிறேன்."

ஸோல்ஜருக்கு ரஜா கிடைத்துவிட்டது.

—ப்ரைவேட் ராபர்ட் கி. வால்ஷ், (இங்லிஷ் டைஜஸ்ட்)

## ஷாவின் லாபக் கணக்கு

மாஜி பெல்ஜிய அரண்மனையின் போட்டோக்காரரான டாக்டர் மார்ஸெல் ஸ்டெர்ன் பெர்ஜர் என்பவர் பெர்னர்ட் ஷாவைப் போட்டோ எடுத்தார் அதற்குக் கட்டணம் 200 பவுன். ஒவ்வொன்றும் பத்துப் பவுன் விகிதம் ஷா இருபது செக்குகள் எழுதி, போட்டோக்காரரிடம் கொடுத்தார். "இதென்ன விசித்திரம்?" என்று போட்டோக்காரர் கேட்டார். காரணத்தை ஷா விளக்கிஞர்: "என் கை யெழுத்து ஒன்றுக்கு 25 பவுன் விலை. நான் பத்துப் பத்துப் பவுனுக்கு 20 செக்குகள் கொடுத்ததால், உமக்கு லாபம் கிடைக்கும். எனக்கும் லாபம் கிடைக்கும், 10 செக்குகளையும் ஒவ்வொன்றும் 25 பவுன் விகிதம் நீர் விற்றுவிடலாம். செக்குகளை வாங்கிக் கொள்பவர்கள், என் கை யெழுத்து இருப்பதால், அவைகளைப் பணமாக மாற்ருமலே வைத்திருப்பார்கள்."

—ரீடர்ஸ் டைஜஸ்ட்

# குழந்தையின் உணவு நாய்க்கா?

ஜே. ஸி. குமரப்பா

தேனை உற்பத்தி செய்து, அதை விற்பனை செய்வதில் தாங்கள் அற்புதமான நிர்வாக அமைப்பு வேலைகள் செய்து வருவதாக, கூட்டுறவு விற்பனைச் சங்கம் ஒன்றின் காரியதரிசி பெருமை யடித்துக்கொண் டிருந்தார்.

சங்கத்தைப் பார்வையிட வந்தவர்களை யெல்லாம் கூட்டிக் கொண்டு போய், அங்குள்ள பண்ணைக்காரர் ஒருவருடைய வீட்டை மிகவும் பெருமையோடு காட்டிக்கொண் டிருந்தார். அந்தப் பண்ணைக்காரரின் பண்ணை வீட்டைச் சுற்றிலும் முப்பது குடியிருப்புகள் இருந்தன. அந்தச் சமயத்தில் பண்ணைக்காரரின் மகளாகிய சிறு குழந்தை ஒன்று, தேன் கூடுகள் வைத்திருந்த இடத்துக்கு ஓடி வந்தது. வந்தவர்களில் ஒருவர், குழந்தையைப் பார்த்துத் "தேனீக்கள் என்ன செய்துகொண் டிருக்கின்றன?" என்று கேட்டார்.

"ஈக்கள் தேன் சேர்த்துக் கொண்டிருக்கின்றன" என்று அவள் பதிலளித்தாள்.

"உனக்குத் தேன் பிடிக்குமா?" என்று அவர் கேட்ட அடுத்த கேள்விக்கு, அவளால் பதில் சொல்ல முடியவில்லை. விசாரித்துப் பார்த்ததில், அவள் தேனை ருசி பார்த்ததே யில்லை என்று தெரிய வந்தது. தன் குழந்தைக்குக் கொஞ்சங்கூடத் தேன் கொடுக்கா திருந்தது ஏனோ என்று பண்ணைக்காரரைக் கேட்ட போது, தமக்குச் சரி யென்று தோன்றிய பதிலையே அவர் சொன்னார்:

"கூட்டுறவுச் சங்கத்தில் ஒரு பவுண்டு தேனுக்கு ஒரு ரூபா வீதம் தருகிற போது, என் வீட்டில் நான் தேனை உபயோகித்து வரக் கட்டி வருமா என்ன"? என்று பண்ணைக்காரர் கேட்டார்.

விஷயங்கள் இந்த ஸ்திதியில் இருப்பது சங்கத்தின் வேலை பூராவையும் பாழடித்து விடுகிறது. சங்கம் செய்கிற வேலையால் கிடைக்கும் மொத்தப் பலன் என்ன? குழந்தையின் வாயி லிருந்து தேனைப் பிடுங்கி, ஏற்கெனவே உணவுப் பண்டங்களை மித மிஞ்சிச் சேர்த்து வைத்துக்கொண் டிருக்கிற பணக்காரருக்கு அதைக் கொடுக்கிறது. முட்டைகளை விற்பனை செய்கிற விஷயத்தில் இந்தச் சங்கம் செய்யும் வேலையும் இதே மாதிரிதான். பணம் படைத்தவர்களுக்கு முட்டை கிடைக்கும்படி செய்வதற்காக, முட்டையை உற்பத்தி செய்கிறவர்களுடைய குழந்தைகளுக்குப் புஷ்டி யுள்ள நல்ல உணவுப் பண்டங்கள் கிடைக்காதபடி செய்து விடுகிறார்கள். இந்த மாதிரி, சங்கங்கள் சேவை யென்ற பெயரில் பொது மக்க

பணத்தின் செப்பிடு வித்தையால் உலகம் சீரழிந்து வருகிறது. உலகெங்கும் இந்த நிலைமையைக் கண்டு மக்கள் கொதித்தெழுந்து வருகிறார்கள். பற்பல பிரச்னைகளுக்கும் ஒரு புறம் பொதுவுடைமைக்காரர்கள், ஒரு பரிகாரம் சொல்லுகிறார்கள். மறு புறம் காந்திய வாதிகள் வேறு நோக்கில் பரிகாரம் சொல்லுகிறார்கள். 'கிராம உத்யோக' பத்திரிகையில் உள்ள இந்தக் கட்டுரை அதற்கோர் உதாரணமாகும்.

ளுக்குப் பெருங் கெடுதல் செய்து வருகின்றன.

ஆலைகளும் பணக்காரர்களின் நல உரிமைகளும் பெருகப் பெருக, இந்த மாதிரி நிலைமை நாடெங்கும் விரைந்து பரவி வருகிறது. கைரா ஜில்லாவில் பால்காரர்கள் தங்கள் இஷ்டப் படி பாலை உபயோகித்துக் கொள்ளக் கூடா தென்று ஒரு மாதத்துக்கு முந்திச் சர்க்கார் தடை உத்தரவு போட்டு விட்டார்கள்.

பம்பாயில் ஒரு குறிப்பிட்ட ஸ்தாபனத்தின் பிரதிநிதிகள் மட்டுமே பாலை வாங்கவோ விற்கவோ செய்யலாம் என்று அந்த ஜில்லா மாஜிஸ்ரேட் லைசென்ஸ் பிறப்பித் திருக்கிருர். அதுவும், இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் இந்த உத்தரவு பிறப்பிக்கப்பட் டிருக்கிறது! பெரிய பெரிய மொகலாய மன்னர்களின் ஆட்சிக் காலத்திலே கூட, இந்த மாதிரி கெடுபிடியான உத்தரவுகள் கிளம்பியதில்லை.

இப்போது ஒரு செய்தி வந்திருக்கிறது. சர்க்கரை ஆலைகள் உள்ள பிராந்தியங்களிலே, வெல்லம் காய்ச்சுவதற்காகக் கரும்பை யாரும் உபயோகிக்கக் கூடா தென்று சென்னை, வங்காளம், பீகார், ஐக்கிய மாகாண சர்க்கார்கள் தடை போட்டிருக்கின்றனவாம். மூலப் பொருள்களை — அவைகள் உலோகமாயிருப்பினும் சரி, விவசாய, கைத் தொழில் பொருள்களா யிருப்பினும் சரி—தம் இஷ்டப்படி செப்பம் செய்து, பண்டங்களாக ஆக்குகிற உரிமை இவற்றின் சொந்தக்காரருக்கும் உற்பத்தியாளருக்கும் இருக்கவே இருக்கும். இது அவர்களுடைய பிறப்புரிமை.

இந்த உரிமையை அவர்களிடமிருந்து பிடுங்கினுல், நல்லபடியாய் அவர்கள் வேலை செய்து வருகிற உரிமை அவர்களுக்கு இல்லை என்று மறுப்பதாக ஆவதோடு, வறுமையை அவர்கள் மத்தியில் கொண்டு போய்ப் புகுத்துவதாகவும் ஆகும். சர்க்கார் இந்த மாதிரியான சட்டங்களைப் பிறப்பிப்பது, குழந்தைகளிட மிருந்து அவர்கள் சோற்றைத் தட்டிப் பறித்துத் தெருவில் போகிற நாயிடம் கொடுப்பதைப் போலவே ஆகும்.

பம்பாய் சர்க்கார், புனுவில் உள்ள கைக் காகிதத் தொழிற்சாலையை மூடி விடும்படி போட்ட உத்தரவை எதிர்த்துப் போன நவம்பரில் நாங்கள் தாவாச் செய்திருந்தோம். இவைகள்தான் யுத்தப் பிற்காலச் சீரமைப்புப் பற்றிச் சர்க்கார் போட்டிருக்கும் திட்டங்களின் நிழலுருவங்களோ? அப்படியானுல், மக்களுக்கு அவர்கள் நல்ல தொன்றும் செய்யப் போவதாகத் தெரியவில்லை. மக்களைப் பாழடித்துத்தான் விடுவார்கள் போல் தோன்றுகிறது. இந்த அன்னிய சர்க்காரால் விஷயங்களை உள்ளது உள்ளபடி பார்க்க முடிய வில்லை.

ஆலைகள்-அவைகள் பிரிட்டிஷ் ஆலைகளாயினும் சரி, இந்திய ஆலைகளாயினும் சரி-பொது ஜனங்களின் நலத்தை வேகமாகக் கெடுத்துக் கொண்டு வருகின்றன.



# புத்தக உலகம்

**சுவாமி விவேகானந்தர் சம்பாஷணைகள்:** மொழி பெயர்ப்பு: சுவாமி விபுலானந்தர். வெளியிட்டோர்: ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், மயிலாப்பூர், சென்னை. கிரௌன் 1×8. 432 பக்கம். விலை ரூ. 3-12-0.

இந்து சமயம் என்றால் என்ன, அதன் பெருமை யாது, அதன் குறைபாடுகள் யாவை, மனிதன் மனிதனை வாழ்வது எப்படி, சமய தத்துவங்களும் வேதாந்த போதனைகளும் வாழ்க்கையோடு எப்படிப் பின்னிக் கிடக்கின்றன, இவற்றைப் பகுத்தறிந்து, வாழ்க்கையைச் செம்மைப்படுத்த எப்படி உபயோகித்துக் கொள்ளவேண்டும்—என்கிற வாழ்க்கையோடு ஒட்டிய அடிப்படை விஷயங்கள் அனைத்தையும் வியக்கத்தக்க தெளிவோடும் ஆழத்தோடும் இந்த அறிவுப் பொக்கிஷம் விளக்குகிறது. பண்டிதரும், பாமரரும், தெய்வ பக்தரும், நாஸ்திகரும் இதைப் படிப்பதால், இதுவரை தெளிவற்றிருந்த அனேக விஷயங்களை அவர்கள் தெளிவு படுத்திக்கொள்ள முடியும். படிப்பதற்கு, நாவல் மாதிரி கவர்ச்சியா யிருக்கிறது. நயமான மொழி பெயர்ப்பு. எழுத்துப் பிழைகள், இலக்கணப் பிழைகள் இருக்கின்றன. இவைகள் இல்லாமல் திருத்தப்பட்டிருந்தால் மிக்க நன்றாயிருந்திருக்கும்.

**1. கந்தசஷ்டி விரதச் சிறப்பு:** ஆசிரியர்: தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவர் க. வச்சிரவேல் முதலியார். வெளியிட்டோர்: மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானம். கிரௌன் 1×8. 68 பக்கம். விலை அணா ஒன்று. **2. திருத்துருத்தித் திருப்பதிகங்கள்:** ஆசிரியர்கள்: ஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி. வெளியிட்டோர்: தருமபுர ஆதீனம். கிரௌன் 1×16. 18 பக்கம். விலை தெரியவில்லை. **3. ஐந்தெழுத்து: 4. உருத்திராக்கம்: 5. திருநீறு:** இவை மூன்றையும் வெளியிட்டோர்: திருக்கடவூர் ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி தேவஸ்தானம். கிரௌன் 1×32. ஒவ்வொன்றும் 29 பக்கம். விலை தெரியவில்லை.

தருமபுர ஆதீனத் தலைவர் ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் சைவத் தொண்டுக்கும் தமிழ்த் தொண்டுக்கும் தக்க எடுத்துக் காட்டுகளாக இந்த வெளியீடுகள் விளங்குகின்றன. தமிழ்நடை இன்னும் சரளமா யிருக்க வேண்டும். படிப்பவர், விஷயத்தில் ஈடுபடாமல், சொற்களைக் கண்டு மலைக்கும்படி செய்யக்கூடாது.

**வாழ்க்கை விநோதம்:** ஆசிரியர்: ஏ. எல். வள்ளியப்பா. வெளியிட்டோர்: புத்தக நிலயம், தெப்பக்குளம், திருச்சி. கிரௌன் 1×8. 82 பக்கம். விலை ரூ. 1-4-0.

இதிலுள்ள 13 நகைச் சுவைக் கட்டுரைகளும் ஆசிரியர் தம்முடைய வாழ்க்கையில் கண்ட விநோத நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்தனவாய்த் தோன்றுகின்றன. நகைச் சுவையின் ரகசியம், கூறாமல் கூறி நிறுத்துவதிலே தான் இருக்கிறது. பல இடங்களில் ஆசிரியர் விளக்கிக் கூற முற்பட்டு விடுகிறார். இருந்தாலும், இது ஒரு நல்ல முயற்சி. ரசனை நிறைந்தது.

**இந்திய ரயில்வேக்கள்:** ஆசிரியர்: ஜே. ஸி. குமரப்பா. மொழி பெயர்ப்பு: மீ. விநாயகம். வெளியிட்டோர்: கதம்பம் வெளியீடு, 46, முத்துமாரி செட்டி தெரு, ஜி. டி., சென்னை. கிரௌன் 1×8. 32 பக்கம். விலை அணா ஐந்து.

மிக முக்கியமான விஷயங்களின் உண்மைகளைக் காரசாரமான பாஷையில், ஆதார பூர்வமாய் எடுத்துக் காட்டுகின்றது.

*

Printed and Published by Vai. Govindan at the Shakti Press Ltd., (Shanti Press) 115-E, Mowbrays Road, Royapettah, Madras
Managing Editor: Vai. Govindan. Editor T. J. Ranganathan